உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

கதிராமங்கலம்

ஸ்ரீ வனதுர்க்காதேவி

உ
சிவ சிவ
சிவமயம்

# சைவ சித்தாந்த மகா சமாஜ 76-ஆம் ஆண்டு விழா

வாரணாசி

# சைவர் மாநாட்டுத் தலைமை உரை

6—3—82

(ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்சுவாமிகள்)

எல்லாம் வல்ல இறைவனின் திருவருளும் காசித் திருமடத்தின் ஆதி முதல்வராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளின் திருவருளும் முன்னிற்க இப்புனித இடத்தில் சைவ சித்தாந்த மகா சமாச ஆண்டு விழா இன்று நிகழத் திருவருள் கூட்டுவித்துள்ளது. ஆதி முதல்வராகிய ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் செந்திற் பெருமானின் திருவருள் பெற்ற இடம் திருச்செந்தூர் ஆகும். அவர் திருவடிப்பேறு பெற்ற இடம் இப்புண்ணிய இடமேயாகும். இத்திருப்பதி எல்லையில்லாப் புண்ணியமுடையது. இத் திருப்பதியில் இறப்போர்க்கு உமையம்மை திருவைந்தெழுத்தை ஓதி முத்திப்பேறு வழங்குவள் என்றல் மரபு. 'காசியில் இறக்க முத்தி' என வழங்குவது இது பற்றியேயாம். 'போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுந்து' புனிதனை வணங்கும் புண்ணியப்பேறு இத்திருப்பதிக் கண் உறைவார்க்கும் அவ்வப்பொழுது வந்து வழிபடுவார்க்கும் கிடைத்தற்கரிய பெரும் பேருக விளங்குகின்றது. நம் திருமடத்தின் ஆதி முதல்வராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பல்லாண்டுகள் இங்கு எழுந் தருளியிருந்து திருமடம் ஒன்றை அமைத்து ஞானவாரமுதத்தை வழங்கி யருளி உய்வித்தருளியதும் இத்திருத்தலமேயாகும். இத்தகைய புண்ணியப் பேறுகள் பலவும் நிறைந்தும் சிறந்தும் விளங்கும் இத் திருப்பதியில் சைவ சித்தாந்தப் பெருவிழா நிகழ்வது மகிழ்ச்சிக்கும் பாராட்டுக்கும் உரியதாகும்.

சைவ சித்தாந்தச் செந்நெறி தொன்மையும் தலைமையும் வாய்ந்த தாகும். இத்திருநெறியில் சிவலிங்கத்தை எழுந்தருளுவித்துக் கொண்டு வழிபாடு செய்துவரும் மரபும் மிகப் பழமையுடையதாகும். சிந்துவெளி நாகரிக வரலாற்றாலும், உலக நாடுகளில் ஆங்காங்கு காணப்பெறும் சின்னங்களாலும், புதைபொருள் அகழ்வாலும் இவ்வழிபாட்டின் தொன்மை விளங்கக் கூடியதாகும். சிவபரம்பொருளை நினைவு கொண்டு உய்யும் சிவலிங்கத் திருமேனியைக் 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாம் நீணாகம் அணிந்தார்க்கும் நிகழ்குறியாம் சிவலிங்கம்' எனச் சேக்கிழார் பெருமான் சிறப்பிப்பர். இச் சிவநெறியை, செந்நெறியை, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வியந்தும் நயந்தும் பலபடப் பாராட்டி மகிழ்வர்.

'திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தம்'

'ஓரும் வேதாந்தமென்று உச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தம்'

'மறை முடிவாம் சைவம்'

'அருட்பெரும் சைவம்'

என்பன அவர் பாராட்டி மகிழும் திருவாக்குகளாகும்.

இத்தகைய அருநெறியைத் தம் உயிர்ப்பாகவும், தம் பெயராகவும் கொண்டு இலங்கும் இந்நிறுவனம் 76 ஆவது ஆண்டு அகவை நிரம்பப் பெறுகின்றது. இந்நெடிய ஆண்டுகளில் இந்நிறுவனம் செய்து வந் திருக்கும் பணிகள் போற்றிப் பாராட்டுதற்குரியனவாகும். சில நிறுவனங் கள் ஆண்டுக்கு ஒருமுறை கூடி விழாக்கள் நடத்தி அவ்வளவில் மகிழ்ந்து விடுவது உண்டு ஆனால் இந்நிறுவனமோ ஆண்டுதோறும் சிறப்பாக இத் தகைய பெருவிழாக் கொண்டாடுவதோடு அமையாதுசமய குரவர் களையும் சந்தான குரவர்களையும் நினைவுகூருமாறும் அவர்கள் அருளிய அருள் நூல்களை ஏற்றுப் போற்றுமாறும் பற்பல விழாக்களை நடத்தி வருவது பெரும் பயன் உடையதாகும். இவையன்றித் திருமுறைகளையும் ஞானப்பனுவல்களையும் அடக்க விலையில் பிழையின்றிப் பதிப்பித்து உதவி வரும் பாங்கும் இந்நிறுவனத்துக்கு உரிய தனிச் சிறப்பாகும். திங்களி தழாகச் 'சித்தாந்தம்' என்னும் செழுமலர் ஒன்றைக் கடந்த 54 ஆண்டு களாகத் தொடர்ந்து நடத்தி வருவது இந்நிறுவனத்தின் அரியதொரு பணியாகும் அண்மைக் காலமாக "SAIVA SIDDHANTHA" என்ற ஆங்கில முத்திங்கள் இதழை வெளியிட்டு வருவதும் பாராட்டுதற்குரிய தாகும். இந்நிறுவனத்தையும், இதனைத் தொடங்கிய அன்பர்களையும்,

தொடர்ந்து கட்டிக் காத்து வந்திருக்கும் அன்பர்களையும், இற்றை நாளில் தலைவராகவும் செயலராகவும் பொருளர் ஆகவும் உறுப்பினர்கள் ஆகவும் இருந்து வளர்த்து வரும் அன்பர்களையும் இந்நாளில் பாராட்டு வது பொருந்துவதாகும்.

இன்று முதல் மூன்று நாட்கள் திருவருட் சிந்தனையோடு நடக்க விருக்கும் விழா, பல்வேறு அரிய கருத்துக்களை நினைவுகூரும் வண்ணம் அமைந்திருக்கும் பெருவிழாவாகும். இந்நாளில் வெளியிட்டிருக்கும் நூல்கள் மூன்றாகும். ஒன்று சிவ பரம்பொருளைப் பற்றியதாகும். பிறி தொன்று மாநாட்டுப் பவள விழா மலர் ஆகும். மற்றொன்று ஞான சாத்திரப் பனுவல்களாகிய திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் ஆகும். இம்முப் பெரும் நூல்களும் சிவமணம் கமழும் பெருநூல் களாகும்; இவற்றுள் மூன்றாவதாகக் குறிக்கப்பெற்ற இருநூல்களும் ஞான நூல்களாகும். இவ்விரு நூல்களும் மெய்கண்டார் காலத்திற்கு முன் தோன்றியவை. இஞ் ஞான நூல்களின் ஆசிரியர்கள் ஒரே பெய ருடையவர். தோன்றிய ஊரால் வேறுபட்டவர். ஞானநூற்பொருளை விளையாட்டு வகையான் விளக்குவது திருவுந்தியாராகும். மகளிர் விளை யாட்டுக்களுள் ஒன்றாக விளங்குவது உந்தீபறத்தல் ஆகும். இவ்விளை யாட்டினைக் குறிக்கும் தொடர் பாடல்தொறும் இயைந்து இந்நூலை அணி செய்கின்றது. ஆசிரியர் திருவருள் வலத்தான் ஒன்றியிருந்து உணர்ந்த அனுபவத்தைப் பாடல்தொறும் விளக்கியருளுகின்றார். இதனை விளக்குமுகமாக எழுந்ததே திருக்களிற்றுப்படியார் ஆகும். 44 பாடல் களில் விளக்கப்பட்ட திருவுந்தியார்க் கருத்தையே இந்நூல் விளக்க எழுந்ததாகும். கூத்தப் பெருமானின் திருவடிக்கீழ் விளங்கும் களிறுகள் திருவருளால் இந்நூற் பெருமையை உணர்ந்து எடுத்துப் பெருமானின் திருவடிக்கீழ் வைத்தன. அதுபற்றியே இந்நூல் திருக்களிற்றுப்படியார் எனப்பெற்றது. திருவுந்தியாரின் கருத்தையும் தொடர்களையும் முகந்து நின்று விளக்கும் இந்நூல் 100 பாடல்களை உடையதாகும். சமய குரவர் களின் அருளிச் செயல்களையும் பெருமையையும், உள்ளமுருக ஆசிரியர் வியந்து பாராட்டும் திறம் பெரிதும் அறிந்து மகிழ்தற்குரியதாகும் அடியவர்களின் செயலை வல்வினை, மெல்வினை எனப்பிரித்து அவ்வாற் றானும் திருமுறை ஆசிரியர்களையும் திருத்தொண்டர்களையும் போற்றிப் பாராட்டும் ஆசிரியரின் பாங்கு எண்ணி எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

ஓடம் சிவிகை உலவாக்கிழி அடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்தல் - ஏடு எதிர்வெப்பு
என்புக்கு உயிர்கொடுத்தல் ஈங்கிவை தாம் ஓங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல் (70)

கொல்கரியின் நீற்றறையின் நஞ்சின் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல் நீந்தல் - நல்ல
மருவார் மறைக்காட்டில் வாசல்திறப் பித்தல்
திருவாமூ ராளி செயல் (71)

மோகம் அறுத்திடில்நாம் முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் - தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்தொண்டன் தொண்டுகளை
ஏதாகச் சொல்லுவேன் யான் (72)

பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலரால் சொற்செய்து - மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளும் தேன் (73)

இத்தகைய அருளிச்செயல்கள் எல்லாம் உலகினரை வியக்க வைத்தற்கோ அன்றித் தம் பெருமை காட்டுதற்கோ செய்தன அல்ல. அஃதே அருட்செயல்கள் அனைத்தும் இறைவனின் திருவருள் மேம்பாட்டை உயிர்கட்கு உணர்த்தற்காக அமைந்தனவேயாம். இவ்வருட் செயல்களால் இறைவனின் மாண்பும், அப்பெருமானைத் தலைமைப் பொருளாகக் கொண்டு இயங்கும் சைவ சமய மாண்பும் ஒருங்கு விளங்குகின்றன.

இன்றுஇச் சமயத்தில் அல்லதுமற்று ஏழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார் - இன்று இங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்
எங்கும்இலை கண்டாய் இது (65)

என்ற திருப்பாடலால் ஆசிரியரின் திருவுள்ளமும் அதன்வழி சமய உயர்வும் நன்கு அறியக் கிடக்கின்றது. இவ்விரு நூல்களும் முன்னும் பின்னும் அடைமொழி கூட்டி வழங்கப்படுவதே இவற்றின் அருமையை நன்கு விளக்குவதாகும். இத்தகைய ஞானப் பனுவல்கள் இரண்டிற்கும் தமது நுண்மாண் நுழைபுலம் விளங்க உரையெழுதி விளக்கம் தந்திருப்பவர் நம் அன்பிற்குரியவரும், முன்பு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றி தற்போது ஸ்ரீ மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் தம் புலமைநலம் தோன்றப் பணியாற்றி வருபவரும் ஆன திரு க. வெள்ளைவாரணம் அவர்கள் ஆவர். அவர்களின் ஆழமான அறிவும் அடக்கமான தொண்டும் அனைவரும் அறிந்ததொன்று. இவர்,

களுக்கும் ஏனைய இரு நூல்களையும் உருவாக்கித் தந்திருக்கும் அன்பர்களுக்கும் எல்லா வளங்களும் பெருக திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

இம்மூன்று நாட்களிலும் பேசவிருக்கும் பொருள்கள் பலவேனும் பேசுகின்றவர்கள் பலரேனும் அவற்றின் நோக்கமும் பயனும் ஒன்றேயாகும்.

வினைவயப்பட்டு உழலும் உயிர்கள் அனைத்திற்கும் இயல்பாகவே வினையினின்றும் விளங்கிய அறிவினனாய் விளங்கும் இறைவனே தலைவனாவான். அவனருளால் வினைநீக்கம் பெற்று அவனை அடைவதே உயிர்கள் பெறத்தக்க பயனாம். ஈதொன்றே இம்மூன்று நாட்களிலும் தெளிந்து உணரத்தக்க பகுதியாக அமைந்து உள்ளது.

இதனைச் சற்று விரிவாகப் பகுத்துக்காணின் மூவகையாகக் காணலாம். வினைவயப்பட்ட உயிர் என்பதால் அவ்வினை வேறு; உயிர் வேறு என்பது புலப்படும். அவ்வுயிர்களுக்குத் தலைவனாகவும் வினைநீக்கம் பெற உதவுபவனாகவும் உடைய பொருள் ஒன்று உண்டு; அதுவே சிவ பரம்பொருள் என்பதும் ஈண்டு உளங்கொளற்குரியதாகும். இவற்றையே இறை, உயிர், தளை எனச் சைவ சித்தாந்தம் பகுத்துப் பேசுகின்றது. இம்முப்பொருள் உண்மையை முதன்முதல் தொகுத்துக் கூறிய நூல் 'திருமந்திர'மேயாகும்.

> ''பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
> பதியினைப் போல்பசு பாசம் அனாதி''

என்னும் திருமந்திரம். இவ்வாறு தொகுத்துக் கண்ட நிலை இந் நூலிலேயே முதல்முதல் காணினும் இவற்றைப் பற்றிய உண்மைகள் அந்நூற்கு முன்னமேயே ஆங்காங்கு காணப்படுகின்றன. இற்றைக்கு இருக்கும் நூல்களில் தொல்காப்பியமே மிகப் பழைமை உடையதாகும். அந்நூற்கண், இம்மூன்றும் தனித்தும் ஓரிரு இடங்களில் தொகுத்தும் கூறப்பட்டுள்ளன.

'காலம் உலகம்' எனத் தொடங்கும் நூற்பாவில் 'உயிர் வினை தெய்வம்' ஆகிய மூன்றும் கூறப் பெற்றுள்ளன. சென்ற உயிரின் நின்ற யாக்கை' எனப் பிறிதோரிடத்துக் கூறப்படுகின்றது. இதனால் உயிர், உடல் ஆகிய இரண்டும் வெவ்வேறானவை என்பது விளங்கும். ''ஒன்றே வேறே என்றிரு பால்வயின், ஒன்றி உயர்ந்த பால தாணையின், ஒத்த கிழவனும் கிழத்தியுங் காண்ப'—எனவரும் கூற்றால் வினையுண்மை தெளிவாகக் கூறப்பட்டுள்ளமை உணரலாம் 'வினையின் நீங்கி விளங்கிய

அறிவன்', 'கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே', 'தெய்வம் அஞ்சல்' முதலிய தொடர்களால் இறையுண்மை கூறப்படுமாற்றை அறியலாம். இவ்வாறே சங்க இலக்கியங்களிலும் முப்பொருள் உண்மை பெரிதும் பேசப்படுகின்றன. 'நீலமணிமிடற்ருெருவன் போல, மன்னுக பெரும நீயே', 'காரியுண்டிக் கடவுளது இயற்கை', 'முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்குப், பணிகநின் தலையே', 'மாற்றருங் கணிச்சி மணி மிடற் ருேனும்' எனப் பல இடங்களில் சிவ பரம்பொருள் விதந்து பேசப் படுகின்றது. 'தீதும் நன்றும் பிறர்தரவாரா', 'நீர்வழிப் படூஉம் புணை போல் ஆருயிர், முறைவழிப் படூஉம் என்பது திறவோர் காட்சியில் தெளிந்தனம்' என்பன போன்ற குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் பேசப்படும் வினைக் கொள்கை ஆகும். 'ஈயாது வீயும் உயிர்தவப் பலவே' 'மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத்தொருமையும்' என வருவனவற்ருன் உயிருண்மை விளக்கம் பெறுகின்றது. திருக்குறளிலோ இம்முப் பொரு ளுண்மைகளும் மிக அழகாகவும் தெளிவாகவும் பேசப்பட்டுள்ளன. கடவுள் வாழ்த்தில் இறையுண்மையும் அப்பரம் பொருளை மனமொழி மெய்களால் வழிபடல்வேண்டும் என்பதையும் ஆசிரியர் திருவள்ளுவனர் மிக அழகாகக் குறிப்பிடுகின்ருர்.

'மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்'

'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'

'கோள்இல் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை'

எனவரும் குறட்பாக்கள் இறைவனை மனமொழிமெய்களால் வழிபட வேண்டும் என்பதை முறையாகக் குறிப்பனவாம்.

''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்,
மற்றீண்டு வாரா நெறி''

''ஓர்த்து உள்ள முள்ள துணரின் ஒருதலையாப்,
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு'',

''பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பதறிவு''

என்னும் குறட்பாக்கள் மூன்றும் குருவருள் வாயிலாகப் பெற்ற மெய்யுணர்வின் பயனைத் தெளியவும் அடையவும் கூறுவனவாம். இனிக்

காப்பியங்களில் பார்க்கும் பொழுதும் சிவபரம் பொருளுக்குரிய இடம் தனித்ததும் தலைசிறந்ததுமாக விளங்குகின்றது. 'பிறவா யாக்கைப் பெரியோன்', 'நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலா' எனவரும் சிலப்பதிகாரத் தொடர்கள் அப்பெருமானுக்குரிய முதன்மையைத் தெளிவாகக் குறிக்கின்றன. 'ஆனே றுயர்த்தோன் அருளினிற்றோன்றிய', 'செஞ்சடை வானவன் அருளில் தோன்றிய' எனச் சேரன் செங்குட்டுவ னின் சிவவழிபாட்டு மரபுரிமை விதந்து பேசப்படுகின்றது. சிவபரம் பொருளின் சேடத்தைச் சிரத்தில் கொண்டு புறப்பட்ட சேரன் செங்குட்டுவன் 'ஆடகமாடத்து அறிதுயில் அமர்ந்த' காத்தற் கடவுளின் சேடம் அதன்பின் வர அதனைச் சிரத்தில் அணியாது தோளில் அணிந் தனன், என வரும் குறிப்பு அப்பேரரசனின் சிவபத்திமைச் சிறப்பையும் அதன்வழிச் சிவபரம் பொருளின் மேன்மையையும் ஒருங்கு குறிப் பனவாம். இவ்வாறெல்லாம் சிவபரம் பொருளைப் போற்றிவந்த சிறப்பும் அதன்வழிப் பெற்ற மெய்யுணர்வும் அக்காலத்தை அடுத்துத் தோன்றிய சமய குரவர்களாலும் அவர்களை அடுத்துவந்த சந்தான குரவர்களாலும் ஆழமும் அழுத்தமும் பெற்றன.

சமய குரவர்கள் சிவநெறியை ஊரூராகச் சென்று பரப்பியவர்கள். அவர்களின் சமய ஒழுகலாறும் சமுதாயத்தொண்டும் தமிழ் மக்களைப் பெரிதும் ஈர்த்தாட்கொண்டன. சமய குரவர்களை நினைவுகூரும்பொழுது அவர்களையும் அவர்களுக்கு முன் வாழ்ந்தருளிய காரைக்கால் அம்மையார், திருமூலர் ஆகியோரையும் பின் வாழ்ந்த திருவிசைப்பா ஆசிரியர்கள், பட்டினத்தடிகள், சேக்கிழார் முதலான அருளாளர்களை யும் நினைவுகூர்தல் பொருந்துவதாகும். இவர்கள் அனைவரும் அருளிய அருள் நூல்களைப் பன்னிரு திருமுறைகளாக வகுத்தமைத்துக்கொண்டு நாம் பாராட்டி மகிழ்கின்றோம். திரு என்பது திருமகள், செல்வம், கண்டாரால் விரும்பப்படும் தன்மை முதலிய பலபொருள்கள் படுமேனும் ஈண்டுச் சிறப்பாகவும் அவற்றிற்கு மேலாகவும் குறிக்கத்தக்கது இறைவனையேயாம். 'திருவே என் செல்வமே' என அப்பர் பெருமான் அழைத்தருளிப் போற்றுமாற்றான் இவ்வுண்மை அறியலாம், எனவே அத்தகைய திருவினை அடையும் நெறிமுறைகளை அருளுவதே திருமுறை ஆகும். 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கி 'அடியார் அவர் வான்புகழ், நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்' எனத் திருமுறை நிறைவு பெறுகின்றது. இத்தொடக்கமும் நிறைவும் பிரணவத்தை நினைவுகூருமாறு அமைந்துள்ளது. எனவே பிரணவப் பொருளாக விளங்குவது திருமுறை என்பது உளங்கொளத் தக்கதாம். இம்மைக்கும் மறுமைக்கும் வருத்தம் வந்தடையாதவாறு காப்பதோடு அவற்றிற்கு

மேலாய வீடுபேற்றை வழங்கியருளும் சிறப்பும் இத்திருமுறைகளுக்கு உண்டு. இப்பயனைத் திருமுறை ஆசிரியன்மார்கள் அனைவரும் அருளி யுள்ளனர். ஆதலால்தான் திருத்தொண்டருள் ஒருவராயகணநாதர், இத்திருமுறைகளை நெறியாக ஓதுதற்கும் எழுதுதற்கும் கேட்டற்கும் உரிய நெறிமுறைகளைக் கற்றுத் தருதற்காகவே ஒருபயிற்சி நிலையத்தைக் காழிப்பதியில் உருவாக்கினர். அந்நெறி பிழையாது இன்றும் நம்மில் சிலர் நாளும் திருமுறை ஓதும் பழக்கத்தை மேற்கொண்டு வருகின்றனர். பின்வந்த சந்தான குரவர்கள் இத்திருமுறை ஆசிரியர்களையும் அவர்கள் அருளிய அருளிச் செயல்களையும் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்குகளையும் பலபடப் போற்றி மகிழும் திறமும் ஈண்டு எண்ணற் குரியதாகும். ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்'' ''சிவனெனவே தேறினன் யான் என்றமையால்'', எனவரும் திருக் களிற்றுப்படியார் தொடர்கள் திருவாசகத் தொடர்களை முகந்து நிற்பனவாம். ''ஈருகி அங்கே முதல் ஒன்றாய் ஈங்கு இரண்டாய், மாருத எண்வகையாய்'' எனவரும் திருக்களிற்றுப்படியார், ஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கை முகந்து நிற்பதாகும். ''இருநிலம் தீநீர் இயமானன் கால்எனும், பெருநிலைத் தாண்டகம்'' என இருபா இருபஃது அப்பரடிகளின் தாண்டகத்தைச் சிறப்பித்துக்கூறும். ஞானசம்பந்தப் பெருமான் அருளிய திருப்பாசுரம் 'அப்பாண்டியன் கேட்பக் கிளந்த மெய்ஞ்ஞானம்' என இருபா இருபஃது சிறப்பித்துக் கூறும். இவ்வாறெல் லாம் போற்றிப் பாராட்டப்பெறும் சிறப்பு திருமுறைகளுக்கே உண்டு என்பது எண்ணி மகிழத்தக்கது. அவர்கள் பண்படுத்திய தமிழக வயலில், சந்தான குரவர்கள் ஆங்காங்கு திருமடங்களை நிறுவி சிவநெறி தழைக்க வித்திட்டனர்.

சித்தாந்தச் செந்நெறியை விளக்குதற்கு எழுந்த நூல்கள் பல வேனும் திருவுந்தியார் முதலாக உள்ள பதினான்கு அருள் நூல்களை விதந்து கூறல் மரபாக உள்ளது. அப்பதினான்கனுள் சந்தான குரவர் களால் அருளிச் செய்யப் பெற்றன 10 நூல்கள் ஆகும் மெய்கண்டாரால் சிவஞான போதமும், அருணந்தி சிவத்தால் சிவஞான சித்தியார், இருபா இருபஃது ஆகிய இரு நூல்களும், உமாபதி சிவத்தால் சிவப் பிரகாசம், திருவருட்பயன், கொடிக்கவி, வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம் ஆகிய ஏழு நூல் களும் அருளிச் செய்யப் பெற்றனவாகும். இவர்களுக்கு முன்னிருந்த பெருமக்களாய திருவியலூர் உய்யவந்த தேவநாயனார், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் ஆகிய இருவராலும் அருளிச் செய்யப்

பெற்றவை முறையே திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாருமாகும். மெய்கண்டார் மாணுக்களுள் ஒருவராய திருவதிகை மனவாசகம் கடந் தாரால் உண்மை விளக்கமும், சீகாழி தத்துவநாதரால் உண்மை நெறி விளக்கமும் அருளிச் செய்யப்பட்டனவாகும். இப்பதினுன்கு அருள் நூல்களையும் ஒருங்கு எண்ணுவதும் அவற்றை மெய்கண்ட சாத்திர மெனச் சிறப்பித்துப் போற்றப் பெறுவதும் நம் மரபாகும். இவ்வருள் நூல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் ஏற்றமுடையன. பரந்தும் விரிந்தும் காணப்பெறும் இப்பெரு நூல்கள் பதினுன்காக விளங் கினும் அவற்ருல் கூறப்பெறும் உண்மை மூன்றில் அடங்குவதாம் அவை இறை, உயிர், தளை என்பன. இறைவனே குருமூர்த்தியாக எழுந்தருளி ஆட்கொள்வன் என்னும் உண்மையே அவ்வப்பெரு மக்களும் தத்தம் குருமூர்த்திகளைப் போற்றும் முகத்தான் கூறியிருக்கும் உண்மையாகும். நம்குமரகுருபர சுவாமிகளும் பண்டார மும்மணிக் கோவையில் இவ் வுண்மையை நயம்பட விதந்து கூறுவர்.

''ஒள்ளொளி பரப்பும் வெள்ளிவே தண்டத்
தொருபாற் பொலிந்த மரகதங் கவினச்
சுடர்விடு செங்கதிர்க் கடவுண்மா மணிக்கு
விளங்கெழில் மிடற்ருேர் களங்கமுண் டென்பவக்
காசுலா மலினங் கரந்தகா ரணத்தால்
மாசிலா மணியென வண்பெயர் நிறீஇ
மேன்மையோ டமர்ந்த ஞான சம்பந்த''

''தண்பணை யுடுத்த தமிழ்ப்பெருங் கூடல்
வண்பதி புரக்கும் மாசி லாமணி
தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்
தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிட ருய வடிவுகொண் டருளாது
மானிட ருய வடிவுகொண் டருளி
எற்பணி பூணு தெற்பணி பூண்டு
பாரிடஞ் சூழாது பாரிடஞ் சூழ்தர
ஆரூர் அமர்ந்த ஞான சம்பந்த''

என வரும் பகுதிகள் சுவாமிகள் தமக்கே உரிய நிலையில் சொல்லழகு மிளிரவும் பொருளழகு ததும்பவும் அருளியனவாம். உயிர்கள் அனைத்தும் சிவஞானத்தை உணர்ந்து தெளியவும், அதன் வழிச் சிவஞானம் சித்திக் கவும் அப்பேற்ருல் உயர்க்குயிராய் விளங்கும் சிவம் பிரகாசித்துத் திரு வருட்பேறு பெறவும் வழிவகுப்பன இம்மெய்கண்ட நூல்களாகும்.

இவ்வாறு போற்றிக் காக்கப் பெற்ற சமயநெறி மூவேந்தர்களாலும் அவர்களை அடுத்து வந்த சிற்றரசர்களாலும் வழிவழிப் புரக்கப்பட்டு வந்தன. திருமடங்கள் இச்செந்நெறியை வளர்ப்பதில் வழிவழியாக கருத்தூன்றி நின்று வருகின்றன. வேற்றுமொழி, வேற்றரசு, வேற்றுப் பண்பாடுகள் கால்கொண்டு வளர வளர இந்நெறியைப் போற்றுவார் நெகிழ்ச்சியும் விரக்தியும் அடைந்து காணப்படுகின்றனர் இந்திய நாடு விடுதலை பெற்றபின்பு எந்தவொரு சமயத்தையும் தனித்துச் சாராதநிலை அரசியல் கொள்கையாக அமைந்த போதிலும் அவ்வப்போது வரும் அரசின் போக்கும், மக்களின் மனநிலையும் சமய நெறிக்குப் புறம்பாகவே வளர்ந்து வருகின்றன. இவ்வாறு இந்திய நாட்டில், குறிப்பாகத் தமிழகத்தில் சமயநிலை அமைந்து இருப்பினும் மாறுக மேலை நாடுகளில் விழிப்புணர்ச்சி தோன்றி வருவது ஓரளவு மனத்திற்கு நிறைவைத் தருகின்றது மன அமைதி பற்றியும் அதனது ஒருமை குறித்தும் உலகியல் நிலை குறித்தும் நமக்குரிய அருளாளர்கள் அருளியிருப்பனவற்றையே இன்று மேலை நாடுகள் ஏற்றுப் போற்றும் நிலைக்கு வந்துள்ளன. அவர்கள் வழி ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவது இறைவனின் திருவுளம் போலும்.

ஆனால் இவ்வமைதி கொண்டு எவரும் அமைந்துவிடக் கூடாது. தனிமனிதர் ஒவ்வொருவரும் தந்தம் அகவாழ்க்கையையும் புறவாழ்க்கையையும் எவ்வாறு போற்றிக் காத்து வருகின்றனரோ அதைப் போன்றே இச்சமயநெறியைக் காத்தலிலும் தலைநிற்க வேண்டும். வாழ்வியல் நெறிக்கு வகுத்துக் கொள்ளும் நெறிமுறைகள் இம்மைக்கு மட்டுமே பயன்தருவனவாம் இச்சமய நெறி ஒன்றே உயிரொடு தொடர்ந்து அதனைப் பண்படுத்தி இறைவனின் திருவருட் பேற்றுக்கு இலக்காக்குவதாகும் இவ்வமையத்தில் ஒன்றை நினைவு படுத்த விழைகின்றோம். சைவப் பெருமக்களாகிய நாம் சில பண்புநலங்களையேனும் இன்றியமையாது குறிக்கொண்டு காத்தல் வேண்டும். சிவநெறிதான் உயர்வுடையது என்றும், அச்சிவநெறியில் திருநீறும். உருத்திராக்கமும், திருவைந்தெழுத்துமே உரிய சாதனங்களாக விளங்குகின்றன என்றும், அச்சாதனங்களைக் கொண்டு நெறியாகவும் உறுதியாகவும் உய்திபெறுதற்குக் குருவருள் வழிப்பெறும் சிவதீக்கை இன்றியமையாதது என்றும் பேசி வருகின்றோம் ஆனால் அதனைச் செயல் முறையிலும் அனைவரும் உறுதியாகக் கைக்கொள்ளல் வேண்டும். இதனைப் பின்பற்றி நிற்போர் அழுத்தம் பெறவும், இதுவரை பின்பற்றாதோர் பின்பற்றவும் வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகின்றோம் கடந்த சில ஆண்டு

களாக அரசியல் நோக்கர்களேயன்றிச் சமய நோக்குடையவர்களும் பரவலாகத் திருமடங்களையும் திருமடங்களில் வீற்றிருக்கும் தலைவர்களையும் குறைகூறி வருவதைக் காண்கின்றோம். திருமடங்களின் தலைவராக அமர்ந்திருப்பவர்கள் சந்தான குரவர்களைப் போன்று "ஓடிவரும் காரணர்க்கு உண்மை உணர்த்தும்" நெறியினர் ஆவர். அவ்வாறு வருவோர் எல்லோர்க்கும் மறுப்பின்றியும் தயக்கமின்றியும் இன்றும் உண்மை உணர்த்தி வருகின்றனர் காலப்போக்கைக் கருத்திற் கொண்டு ஒரு சில இடங்கட்குத் தாமும் போந்தருளி உண்மை நெறியை உணர்த்தியும் வருகின்றனர். இந்நெறி மேலும் வளரவும் திருமடங்கள் மேலும் நற்பணிகளைச் செய்யவும் இங்கு இருக்கும் மெய்யன்பர்களைப் போன்றவர்கள் அடிக்கடி திருமடங்களோடு தொடர்பு கொள்ளுதல் வேண்டும். தொடர்பு கொண்டால்தான் ஒருவர் ஒருவரைப் புரிந்து கொள்ள இயலும். அந்நிலையில் வாழவும் வளரவும் வேண்டுமென்பதை நினைவுபடுத்த விரும்புகின்றோம்.

சிவநெறி தழைக்கவும் இதன்வழி உயிர்கள் உய்யவும் இம்மாநாடு பயன்படுமாக! அந்நெறித்தலைநின்று ஓங்கத் திருவருள் துணைநிற்குமாக !

பூங்கோன்றைக் கண்ணியான் பொன்மன் நிறைஞ்சிடுக
ஆங்கோன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

உலகில் எத்தனையோ அதிசயங்கள் உள்ளன. எதற்கும் விஞ்ஞான ரீதியான காரணம் உண்டோ இல்லையோ மெய்ஞ்ஞான ரீதியான காரணம் நிச்சயமாக உண்டு.

சூரியன் தோன்றுகிறான். இருள் மறைகிறது. இதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் குருநாதனின் திருவடிகளே சரணம் என்று தஞ்சம் புகும் ஆன்மாவுக்கு உடனே ஞானம் பிறக்கிறது. எல்லாருக்குமன்று. பக்குவம் உள்ளவருக்கு ஞானம் வந்தது ஆச்சர்யப் படத்தகுந்தது. சிலருக்கு ஞானம் வராததும காரணம் புரிந்து கொள்ள முடியாதது.

சூரிய வெளிச்சம் பட்ட இடமெல்லாம் நிச்சயமாக இருள் நீங்கும். இது விஷயத்தின் ரகசியத்தையெல்லாம் விஞ்ஞானி விடுவித்து விடுவான். சிலருக்குக் குருவே கிடைப்பதில்லை; சிலர் குருவைக் குருவாக உணர்வதில்லை; சிலர் தாமதமாக உணர்கிறார்கள். ஆயிரத்தில் ஒருவர் குரு வின் தாளடைந்து தன் பிறப்பையே ஒப்படைக்கிறார்.

இதெப்படி! மெய்ஞ்ஞானி பதில் சொல்கிறார். இது ஆச்சர்யப்படத்தகுந்த உண்மை! கடவுளின் வேறற்ற— அதாவது இவர் வேறு கடவுள் வேறு என்ற நிலைமை இல்லாத குருவாக இருக்கும் பட்சத்தில் தகுதி அடிப்படை கூட இல்லாமல் ஞானம் வழங்குவதுண்டு. இதுவும் வியப்பிலே அடங்கும். இது பெருவியப்பு. இப்படிப் பெரு வியப்பான அதிசயங்கள் நடக்கும்போது 'என்னே!' என்ற வியப்பிடைச் சொல்லை வைப்பது கவி மரபு.

தனக்கு நிகரற்றவன் என்பவன் கடவுள் மட்டிலுமே. ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் தம் குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரைத் 'தன்னேரிலாதவர்' என்கிறார். 'மாசிலாமணித் தேசிகா' என்றும் அவர் பெயரைப் பேச வில்லை. முன் அவதரித்த-ஞானசம்பந்தர் என்ற நாமத்தைக் குறிப்பிட்டு அழைக்கிறார். கடவுளின் வேறற்றவர் ஞான சம்பந்த தேசிகர். அவரின் வேறற்றவர் மாசிலாமணித் தேசிகர் என்பது கருத்து.

அந்தக் குருநாதர் அருளும்போது எல்லாம் வெளிச்சமே-ஞானமே. அவர் அருளாதபோது இருட்டு. அஞ்ஞானமாக இருந்தால்கூடக் காரண காரியத் தொடர்பு புரியும். அப்படிக்கும் இல்லாமல், அவர் அருளாதபோது வெளிச்சம் கூட இருளாக இருக்கிறதே! இதுவும் ஒரு பெருவியப்புத் தானே என்கிறார்.

"தன்னே ரிலாஞான சம்பந்தன் தாள்அடைந்தார்க்கு
என்னே! இருள்வெளியாம் என்பரால்—அன்னோன்
அருளாத போதுவெளி யாய்இருந்த வெல்லாம்
இருளாய் இருந்த எனக்கு!

[நேர்-சமம்; தாள்-திருவடி; இருள்-அஞ்ஞானம் வெளி-ஞானம்.]

என்னே என்பதை இறுதியிலும் கூட்டுக.

அநுக்கிரகம் இல்லாதபோது தனக்கு வெளியும் இருளாகிறது என்பது எனக்கு எல்லாம் குருநாதனே என்ற கருத்தில்: அவனருளாலே அவன்தாள் வணங்கும் முறைமை.

—சிவசிவ

# சைவ வேளாளர் சங்கம்,

## சிதம்பரம் கிளை.

தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கத்தின் கிளைச்சங்கமாக ''தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம் சிதம்பரம்'' என்ற பெயரில் 28—2—82 அன்று திருப்பனந்தாள் காசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் அருளாசியுடன் தொடங்கப்பட்டுள்ளது.

திரு. சீனு. அருணாசலம் (மக்கள் நல்லுறவு ஆய்வர்; அஞ்சல்துறை' சிதம்பரம்) அவர்கள் அனைவரையும் வரவேற்றார்கள்.

திரு. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் (தலைவர் திருவிடைமருதூர் சங்கம்) தலைமை வகித்தார்கள்.

திரு. N. காங்கேயம் பிள்ளை அவர்கள் (தலைவர். மத்திய சங்கம் குடந்தை.) பெயர்ப் பலகையைத் திறந்துவைத்தார்கள்.

தஞ்சை மாவட்ட கிளைச் சங்கங்களின் தலைவர்-செயலர்களும், புலவர் A. பாலசுப்பிரமணியம் அவர்களும் (குறிஞ்சிப்பாடி) வாழ்த்துரை வழங்கினர்.

டாக்டர் M. S. கோவிந்தசாமி M. A., Ph.D., அண்ணாமலை பல்கலைக்கழகம் அவர்களும்; திரு சோம. இராஜகணபதி (உதவி கோட்டப் பொறியாளர் சிதம்பரம்.) அவர்களும் சிறப்புரை ஆற்றினர்.

சிதம்பரம் சங்கத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாக உறுப்பினர்களின் பட்டியலை திரு. S. திருநாவுக்கரசு, M. A., செயலர், மத்திய சங்கம், குடந்தை. அவர்கள் வெளியிட்டார்கள். நிர்வாக உறுப்பினர்கள்:—

1. தலைவர்:- திரு. டாக்டர் M. S. கோவிந்தசாமி, M. A, Ph.D., அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
2. துணைத்தலைவர்:- திரு. சாமிஐயா, தமிழ்த்துறை, அ. ப. கழகம்.
   திரு. R. திருநாவுக்கரசு, ஆசிரியர்.
   திரு. V. கனகசபை பிள்ளை
   திரு. M. சண்முகம் பிள்ளை
3. செயலாளர் :- திரு. தி. இரா. தியாகராசன், தலைமை ஆசிரியர் நகரவைப் பள்ளி, சிதம்பரம்.

4. இணைச்செயலர்;- திரு. சீனு. அருணாசலம் அஞ்சல் துறை;
திரு. V. P. சிவகுருநாதன், ஆசிரியர்.

5. பொருளர் :- திரு. R. சுப்பிரமணிய பிள்ளை ஏஜெண்ட், காசி மடம், சிதம்பரம்.

பதினைந்து செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சிதம்பரம் தாலுக்காவிலுள்ள சைவப் பெருமக்கள் 200 பேர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தனர். செயலர், தி. இரா. தியாகராசன் நன்றி நவில மங்கல வாழ்த்துடன் விழா முடிவுற்றது.

## திருத்துறைப்பூண்டி கிளை

தமிழ்நாடு சைவவேளாளர் சங்கம் திருத்துறைப்பூண்டி கிளையின் தொடக்க விழா இவ்வூர்ப் பெரிய கோயில் ஸ்ரீமங்கள நாயகி அம்மன் திருமண மண்டபத்தில் 21—2—82 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் இனிதே நடைபெற்றது. சைவவேளாளப் பெருமக்கள் ஏறத்தாழ இரு நாற்றுவர்வந்திருந்து சிறப்பித்தனர். 4 மணி அளவில் வேளூர் பெருமனூர் சைவத்திரு. கல்யாணசுந்தரம் பிள்ளை அவர்கள் குத்துவிளக்கேற்றி ஸ்ரீ விநாயகப் பெருமான், சைவசமய குரவர்கள் ஆகியோரை வழிபட்டு விழாவினைத் தொடங்கி வைத்தார்கள்.

விழாக் குழுவினர் சார்பில் சைவத்திரு சண்முக தேசிகர் அவர் -கள் கிளைச்சங்கத்தின் தோற்றம் பற்றியும் சைவத்திரு.ஜெயானந்தம் அவர்கள் எடுத்துக் கொண்ட பெருமுயற்சி பற்றியும் விளக்கி விழா வினைச் சிறப்பிக்க வந்த அனைவரையும் வரவேற்றார்கள்.

திருவிடைமருதூர் கிளைச்சங்கத். தலைவர் சைவத்திரு குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் முன்னிலைவகிக்க குடந்தை மத்திய சங்கத் தலைவர் சைவத்திரு. காங்கேயம் பிள்ளை அவர்கள் தலைமை யேற்றார்கள். சைவத்திரு. ந. சண்முகதேசிகர் அவர்களின் இறை வணக்கத்திற்குப் பின் வேளூர் சைவத்திரு. இராமையாப்பிள்ளை அவர்களால் சங்கப் பெயர்ப்பலகை திறந்து வைக்கப்பட்டது. பின்னர் விழாத் தலைவர் சைவத்திரு. காங்கேயம் பிள்ளை அவாகள் தலைமையுரையாற்றினார்கள்.

நாகை—சீனிவாசம் பிள்ளை, திருநாவுக்கரசு பிள்ளை, கீழவயலூர் K. S. அருணஜலம் பிள்ளை, அம்பல்--ச. இராமலிங்கம்,ஆச்சாள்புரம் கலியபெருமாள், ஆரூர்—தட்சிணாமூர்த்திப் பிள்ளை, அண்ணமலைப்

பிள்ளை, இடைமருதூர்—S. முத்துக்குமரன், திருத்துறைப்பூண்டி—S M. வைத்தியலிங்கம்,C. தங்கவேலு,வை. பக்கிரிசாமி,சித்தாய்மூர் சிவனேசன் ஆகியோர் வாழ்த்தியோராவர்.

திருத்துறைப்பூண்டி கிளைச் சங்கத்திற்கு ந. சண்முகதேசிகர் (தலைவர்) S. கல்யாணசுந்தரம்பிள்ளை (துணைத்தலைவர்) அ. சண்முகம் (செயலர்) ரெ. ராசேந்திரன் (துணைச் செயலர்) S. வைத்தியலிங்கம் பிள்ளை அவர்கள் (பொருளாளர்) ஆக தெரிவு செய்யப்பட்டார்கள்.

இப்பொறுப்பாளர்களையும் செயல்குழுவினரையும் பாராட்டித் தலைவர் தம் முடிவுரையை முடித்துக் கொள்ள திரு. வைத்தியலிங்கம் பிள்ளை அவர்கள் நன்றி நவில திரு. சண்முகதேசிகரின் மங்கல வாழ்த்துடன் இரவு 8 மணி அளவில் விழா இனிதே முடிவுற்றது.

## மாயூரம் கிளை

தருமையாதீனம், மதுரை ஆதீனம், குன்றக்குடி ஆதீனம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் ஆகியோரின் அருளாசியுடனும் அனுமதியுடனும் தொடக்கப் பெற்ற இச்சங்கத்தின் மாயூரம் கிளை துவக்க விழாவிற்கு இந்நான்கு ஆதீனங்களும் ஆசிச்செய்திகள் அனுப்பியிருந்தன, மேலும், திருச்சி சைவ வேளாளர் பேரவைச் செயலர் திரு. திருநாவுக்கரசு அவர்களும், திருப்பனந்தாள் சைவர்கள் சங்கமும், திருவையாறு சைவ மகாஜன சங்கமும், திருச்சி திரு. ஆர். நாகசுந்தரம் Ex. M. L. A அவர்களும், தருமபுரம் திரு. கல்யாணசுந்தரதேசிகர் அவர்களும்வாழ்த்துச்செய்தி அனுப்பியிருந்தனர். இறைவணக்கத்தைத் தருமை ஓதுவாமூர்த்தி திரு. திருநாவுக்கரசு தேசிகர் அவர்கள் திருமுறைப் பாராயணம் செய்தபின் விழா துவங்கியது. நூற்றுக்கு மேலான சைவ அன்பர்கள் குழுமினர்.

கீழ்க்கண்டோர்கள் பொறுப்பாளர்களாக ஒருமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்;

தலைவர்: திரு. அ. முத்தையாப்பிள்ளை
செயலர்: பேராசிரியர் சீனு. பாலசுப்பிரமணியன் M. Sc., M-Phil.,

துணைச்செயலர்: திரு. ச. திருஞானசம்பந்தன் B. Sc, B.Ed., L.I.C
பொருளர்: திரு. துரை. சம்பந்தம் பிள்ளை

செயற்குழு உறுப்பினர்கள்:-

1. திருநெறிச் செம்மல், முதல்வர்,
திரு. வி. சா. குருசாமி தேசிகர்
2. செந்தமிழ்வாரிதி, புலவர் திரு. இரா. செல்வகணபதி M.A., B Ed
3. V. மணி
4. மாயூரம் இந்து முன்னணித் தலைவர்
திரு. தி. சொக்கலிங்கம்
5. திரு. இரா. கௌதமன் III Bsc மாணவர்
6 திரு. இரா. அசோகன் II ,, ,,
7. திரு. முத்து. தாயுமானவன் +2 ,,

திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வழங்கியருளிய 'பாராயணத் திரட்டு' நூல்கள் குழந்தைகட்கு சுவாமிகளின் அருட்கொடையாக வழங்கப்பெற்றன.

உ

சிவ சிவ

# காஞ்சிபுரத்தில் தேவார விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

அருளாணையின்வண்ணம் நடத்தப்பெறுவது

துன்மதி ஞு பங்குனி மீ 29உ (11—4—82)

ஞாயிற்றுக்கிழமை

காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகம்பரநாதசுவாமி

## பங்குனி உத்திரப் பெருவிழா 14 ஆம் நாள்

திருமுறைவாணர்கள்:-

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள், திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள், தேவார இசையணி திருவாவடுதுறை
2. திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர், ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சி.
3. திரு. ப. ராமச்சந்திரன், விருத்தாசலம். சங்கீத பூஷணம்,
4, திரு. சா. தண்டபாணி ஓதுவார். சென்னை.
5. திரு. S. L. சாமி — பிடில், திருச்சி.
6. திரு. கோ. வேங்கடராமன் - மிருதங்கம், திருப்பனந்தாள்.

ஏகம்பத்துறை எந்தாய் போற்றி!

M. இராதாகிருஷ்ணன், *M. A.*
நிர்வாக அலுவலர்.

*K. SUBRAMANIYA IYER B. A.,*
*"Thiagaraja Vilasam"*
*Triplicane P. O. Madras-5*

---

குறிப்பு:- காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரநாதர் சந்நிதியில் இரவு 8 மணிக்கு தொடங்கிக் கச்சியேகம்பர் திருவுலாவரும் வீதிகளில் இரவில் இன்னிசைத் திருமுறை கோஷ்டி நடைபெறும்.

# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துன்மதி ஞ்ஃ பங்குனி மீ (1982 மார்ச் — ஏப்ரல்)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| | தமிழ் வ. | ஆங்கில வ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|
| | 1 | (14—3—82) | ஞாயிறு | பஞ்சமி 28- 39 | சுவாதி 8-04 |
| | 2 | (15—3—82) | திங்கள் | சஷ்டி நாள்முழுதும் | விசாகம் 10-26 |
| | 3 | (16—3—82) | செவ்வாய் | சஷ்டி 6-53 | அனுஷம் 3-14 |
| | 4 | (17—3—82) | புதன் | சப்தமி 9-26 | கேட்டை 16-17 |
| | 5 | (18—3—82) | வியாழன் | அஷ்டமி 12-02 | மூலம் 19-20 |
| | 6 | (19—3—82) | வெள்ளி | நவமி 14-27 | பூராடம் 22-08 |
| மார்ச் | 7 | (20—3—82) | சனி | தசமி 16-24 | உத்திராட்டம் 24-26 |
| | 8 | (21—3—82) | ஞாயிறு | ஏகாதசி 17-44 | திருஓணம் 26-05 |
| | 9 | (22—3—82) | திங்கள் | துவாதசி 18-18 | அவிட்டம் 27-01 |
| | 10 | (23—3—82) | செவ்வாய் | திரயோதசி 18-9 | சதயம் 27-14 |
| | 11 | (24—3—82) | புதன் | சதுர்த்தசி 17-16 | பூரட்டாதி 26-48 |
| | 12 | (25—3—82) | வியாழன் | ●அமாவாசை 15-48 | உத்திராடாதி 25-49 |
| | 13 | (26—3—82) | வெள்ளி | பிரதமை 13-52 | ரேவதி 24-26 |
| | 14 | (27—3—82) | சனி | துதியை 11-35 | அசுவனி 22-34 |
| | 15 | (28—3—82) | ஞாயிறு | திரிதியை 9-08 | பரணி 20-48 |
| | 16 | (29—3—82) | திங்கள் | சதுர்த்தி 6-36<br>பஞ்சமி 4-08 | கார்த்திகை 19-03 |
| | 17 | (30—3—82) | செவ்வாய் | சஷ்டி 25-48 | ரோகிணி 17-36 |
| | 18 | (31—3—82) | புதன் | சப்தமி 23-39 | மிருகசீரிஷம் 16-07 |
| ஏப்ரல் | 19 | (1—4—82) | வியாழன் | அஷ்டமி 21-43 | திருஆதிரை 14-51 |
| | 20 | (2—4—82) | வெள்ளி | நவமி 20-02 | புனர்பூசம் 13-48 |
| | 21 | (3—4—82) | சனி | தசமி 18-35 | பூசம் 13-01 |
| | 22 | (4—4—82) | ஞாயிறு | ஏகாதசி 17-24 | ஆயில்யம் 12-28 |
| | 23 | (5—4—82) | திங்கள் | துவாதசி 16-29 | மகம் 12-12 |
| | 24 | (6—4—82) | செவ்வாய் | திரயோதசி 15-53 | பூரம் 10-13 |
| | 25 | (7—4—82) | புதன் | சதுர்த்தசி 15-39 | உத்திரம் 12-35 |
| | 26 | (8—4—82) | வியாழன் | ○பௌர்ணமி 15-49 | அஸ்தம் 13-20 |
| | 27 | (9—4—82) | வெள்ளி | பிரதமை 16-28 | சித்திரை 14-34 |
| | 28 | (10—4—82) | சனி | துதியை 17-39 | சுவாதி 16-18 |
| | 29 | (11—4—82) | ஞாயிறு | திருதியை 19-21 | விசாகம் 18-32 |
| | 30 | (12—4—82) | திங்கள் | சதுர்த்தி 21-30 | அனுஷம் 21-12 |
| | 31 | (13—4—82) | செவ்வாய் | பஞ்சமி 23-58 | கேட்டை 24-12 |
| | **துந்துபி, சித்திரை மீ** | | | | |
| | 1 | (14—4—82) | புதன் | சஷ்டி 21-34 | மூலம் 27-19 |

## 56. மதிப்புக்கும் அவமதிப்புக்கும் அப்பால்

தமிழாக்கம்—கோ. வன்மீகநாதன்

எவனொருவன் தெரிந்துவைத்திருக்கிறனே அவன் பேசுவதில்லை,
எவன் பேசுகிறனே அவனுக்குத் தெரியாது.
அதனுடைய துளைகளை அடையுங்கள்,
அதன் கதவுகளைச் சாத்துங்கள்,
அதனுடைய கூர்மையை மழுங்க அடியுங்கள்,
அதனுடைய சிக்கல்களை அவிழுங்கள்,
அதனுடைய ஒளியை மென்மையாக்குங்கள்
அதனுடைய கொந்தளிப்பை மூழ்கடியுங்கள்
— இதுதான் ஆன்மீக இரகசிய ஐக்கியம்.

அந்நிலையில் அன்பும் பகைமையும் அவனைத்தீண்டா;
இலாப நஷ்டம் அவனை எய்தா,
மதிப்பு அவமதிப்பு அவனைப் பாதிக்க மாட்டா,
ஆகையால் எப்பொழுதும் உலகத்தால் மதிக்கப்பட்ட
(கௌரவிக்கப்பட்ட) ஒருவனுயிருக்கிறன்.

## 57. அரசாட்சி புரியும் கலை

ராஜ்யத்தைஇயல்பான முறையால் ஆள்க.
போரை (அசாதாரணமான) எதிர்பாராதமுறையில்
திடுக்கிடச் செய்யும் முறையில் புரிக.
யாதும் செயற்படாமல் உலகை வெல்க.
இதுதான் முறை என்று எனக்கு எப்படித் தெரியும்?
இவற்றின் மூலமாக:-
எவ்வளவுக்கு எவ்வளவு தடைகள், விலக்குகள்
இருக்கின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு மக்கள்

மேன்மேலும் ஏனழகளாகிறார்கள்.
எவ்வளவுக்கெவ்வளவு ஆயுதங்கள் கூர்மையாக
உள்ளனவோ அவ்வளவுக்கவ்வளவு நாட்டில்
குழப்பம் அதிகரிக்கின்றது.
எவ்வளவுக்கெவ்வளவு கைத்தொழில் முறைத்திறன்கள்
அதி•மாயிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு
வியப்பிறகுரிய வகைப்பொருள்கள் செய்யப்படுகின்றன.
எவ்வளக்கெவ்வளவு சட்டங்களின் எண்ணிக்கை
அதிகரிக்கிறதோ, அவ்ளக்கவ்வளவு திருடர்களும்
கொள்ளையடிப்பவர்களும் அதிகரிக்கின்றார்கள்.
ஆகையால் மெய்ஞ்ஞானி சொல்கிறான்:-
நான் ஒன்றும் செய்யாது வாளாவிருக்கிறேன்
மக்கள் தாந்தாமே திருந்தி விடுகிறார்கள்.
நான் அமைதியை, வாளாவிருத்தலை விரும்புகிறேன்
மக்கள் தாமாகவே நல்லொழுக்கமுடையவராக
ஆகி விடுகிறார்கள்.
நான் யாதொரு வியாபாரத்திலும் ஈடு
படுவதில்லை; மக்கள் தாமாகவே பணக்
காரர்களாகி விடுகிறார்கள்.
எனக்கு யாதொரு ஆசையுமில்லை;
மக்கள் தாமாகவே எளியவர்களாய்,
யோக்கியர்களாய் இருக்கிறார்கள்.



# கொன்றை செய்த மாற்றம்

கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமான் தோலாடை புனைந்தவன். இப்போது பீதாம்பரத்தை, பொன்னுடையைப் புனைந்திருப்பவனாகத் தோற்றுகிறான். பீதாம்பரத்தை உடுப்பவர் திருமால். சிவபெருமான் எப்போது பொன்னுடை புனைந்தான்? இந்த ஐயம் உண்டாவதற்குக் காரணம் என்ன?

ஓ! இப்போதுதான் உண்மை புலனாகிறது. அவன் பீதாம்பரம் புனையவில்லை. அந்தத் தோலாடையே பீதாம்பரமாகத் தன் வண்ணம் மாறித் தோன்றுகிறது. எப்படி? அதைக் குமரகுருபரர் சொல்கிறார்.

கமலைப் பிரானாகிய தியாகேசன் அம்மையோடும் முருகனோடும் எழுந்தருளியிருக்கிறான். முருகன் இருவருக்கும் இடையில் இருக்கிறான். குமரகுருபரர் முருகனுடைய திருவருளைப் பெற்றவர்; திருச்செந்தூர் முருகன் கருணையினால் ஊமைத்தன்மை நீங்கிக் கந்தர்கலிவெண்பாவைப் பாடியவர். ஆதலால் அவனை, ''என் உயிருக்கு ஒப்பான முருகன்'' என்று தொடங்குகிறார். தியாகேசனுடைய மூத்தபிள்ளைவிநாயகப் பெருமான். இளஞ்சேய்முருகன்.

என்உயிர்க்கு ஒக்கும் இளஞ்சே
யொடு.

உலகமெல்லாம் ஈன்றருளிய அன்னையாகிய உமாதேவியார் அருகில் வீற்றிருக்கிறாள். அவருடைய உயிரைப் போன்றவன் கமலாலயப் பெருமானாகிய தியாகராசன்.

ஏழுலகு ஈன்ற அன்னை
மன் உயிர்க்கு ஒக்கும் கமலைப்பிரான்.

அந்தப் பெருமான் நஞ்சை உண்டு தன் திருக்கழுத்தில் தேக்கி வைத்திருக்கிறான். அது நீலமணி போலத் தோன்றுகிறது. அவனுடைய கண்டம் மணி கண்டம்.

கமலைப்பிரான் மணிகண்டம்

அந்த நீலகண்டம் மேகத்தைப் போலவும் தோன்றுகிறது. கார் காலத்தில் கொன்றைப்பூமலரும். இறைவனுடைய மணிகண்டத்

தைக் கண்டு அவன் அணிந்திருக்கும் மாலையிலுள்ள கொன்றை மலர் நன்முக விரிந்து பொன் நிறம் உள்ள தாதை உதிர்க்கின்றது. மின்னலைத் தோற்றுவிக்கும்மேகம் இது என்று இறைவனுடைய நீலகண்டத்தை எண்ணி அந்தக் கொன்றை அவ்வாறு விரிந்து நன்முக மலர்ந்து பொலபொல வென்று மகரந்தப் பொடியை உதிர்க்கிறது.

மணிகண்டம் கண்டு
மின்உயிர்க்கும் புயல் என்று மென்
கொன்றை பைந்தாது உயிர்க்க.

அந்தப் பொன்னிறம் பெற்ற பூந்தாது இறைவனுடைய ஆடையின் மேல்பரவி அதைப் பொன் னிறமாக்கிவிடுகிறது. தோலாடை முழுவதும் பொன் வண்ணத்தாது பரவி அதைப் பொன்னுடையைப் போலக் காட்சி அளிக்கச் செய்கிறது.

திருமகளுடைய பிராண நாயகனாகிய திருமால் புனைந்த பொன் னுடையோ இது என்று எண்ணும்படி அந்த அழகிய ஆடை ஆகி விடுகிறது.

பைந்தாது உயிர்க்கப்
பொன்உயிர்க் கோன்கன் பொலன்
துகில்
ஆம் எந்தை பூந்துகிலே.

''இதென்ன, பீதாம்பரத்தை அணிந்த திருமால் இங்கே எப்பொழுது வந்து அமர்ந்தார்?'' என்ற ஐயம் தோன்ற, ஆடையிலிருந்த பார்வையைச் சற்றே அருகில் தவழவிட்டால், அங்கே அன்னையும் முருகனும் இருப்பது தெரிகிறது. ''ஓ! இவர் தியாகராசப் பெருமான்தான். இதோ அருகில் முருகனும் அம்மையும் இருக்கிறார்களே! இந்த ஆடையல்லவா நம்மை ஏமாற்றி விட்டது? அவ்வாறு நாம் எண்ணும்படி இந்த ஆடையின் மேல் படர்ந்த பூந்தாது செய்திருக்கிறது. இறைவன் அணிந்திருக்கும் கொன்றை மலரின் வேலை இது'' என்று நின்று நிதானித்துப் பார்க்கும் போது தெரிகிறது.

இந்த அதிசயத்தைச் சொல்கிறார் முனிவர்.

என் உயிர்க்கு ஒக்கும் இளஞ்
சேயொடு
உலகு ஈன்ற அன்னை
மன்உயிர்க்கு ஒக்கும் கமலைப்
பிரான்மணி கண்டம் கண்டு
மின்உயிர்க் கும்புயல் என்றுமென்
கொன்றைபைந் தாது உயிர்க்கப்
பொன்உயிர்க் கோன்கன் பொலன்
துகில்
ஆம், எந்தை பூந்துகிலே.

என் உயிரை ஒத்த இளங் குழந்தையாகிய முருகப்பெருமானோடு உலகங்களையெல்லாம் பெற்ற அன்னையாகிய உமாதேவியாரின் நிலைபெற்ற உயிருக்கு ஒக்கும் கமலைப்பிரானாகிய தியா

கேசனுடைய நீல மணியைப் போல உள்ள திருக்கழுத்தைக் கண்டு, அவன் மார்பில் அணிந்த மாலையிலுள்ள மெல்லிய கொன்றை மலர்கள் மஞ்சள் நிறமுள்ள மகரந்தப் பொடியை உதிர்க்க, அதனால் எம் தந்தை யாகிய தியாகேசனுடைய மெல் லிய துகில் திருமகளுடைய பிராண நாயகனாகிய திருமால் அணியின் பொன்னுடை ஆகி விடும்.

என் உயிர்க்கு ஒக்கும் இளஞ்சேயென்றது, குமரகுருபர ருடைய வழிபடு கடவுள் முருகன் என்பதைப் புலப்படுத்தியது. இளஞ்சேய்- சிவபெருமானுடைய இளைய பிள்ளையாகிய முருகன். இளஞ்சேயையும் உலகையும் ஈன்ற அன்னை. 'எனக்கும் அவள் அன்னை' என்பது குறிப்பு. பின்னால் இறைவனை எந்தை என்று சொல்வதனால் இது பெறப் படும். மன் உயிர்—நிலைபெற்ற உயிர். மணி — நீலமணி. மின் உயிர்க்கும்—மின்னலைத் தோற்று விக்கும். புயல்—மேகம். மென் கொன்றை—இறைவன் மார்பில் அணிந்த மாலையிலுள்ள மென் மையான கொன்றைப் பூக்கள். அவை மஞ்சள் நிறம்உடையவை; அவற்றின் தாதும் பொன்னிறம் பெற்றது. பைந்தாது - பசுமை யான மகரந்தப் பொடியை; பசுமை, மஞ்சள் நிறத்தைக் குறித்தது. உயிர்க்க - உதிர்க்க. பொன் – திருமகள், கொண்கன்– கணவன்; இங்கே திருமால். பொலன் துகில்–பீதாம்பரம். பூந் துகில் – பொலிவு பெற்ற ஆடை.

கொன்றை கார் காலத்தில் மலர்வது; 'கார்விரி கொன்றைப் பொன்நேர் புதுமலர்'' என்பது அகநானூறு.

கொன்றை மலர் உதிர்த்த தாது படிந்து இறைவன் அணிந்த ஆடை பொன்னுடை போலத் தோன்றுகிறது.

இதில் திரிபதிசய அணிவந்தது.

கொன்றை, கண்டம் கண்டு தாது உயிர்க்க, எந்தை துகில் பொலன் துகில் ஆம் என்று கூட்டுக.

இது திருவாரூர் நான்மணி மாலையில் உள்ள 19–ஆவது பாட்டு.





# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிக்கை)

தமிழகத்தின் சமய வளர்ச்சிக்காக ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் சார்பாகத் தமிழில் வெளிவருகிறது.

மகான்களின் வாழ்க்கையில் நடைபெற்ற சுவையான நிகழ்ச்சிகள், நடைமுறை வாழ்க்கையில் மதத்தைக் கைக் கொள்ள வேண்டிய வழிமுறைகள், சாஸ்திரங்களின் உட் பொருள் விளக்கங்கள், ஆத்ம தத்துவம் குறித்த ஆராய்ச்சி, வேதாந்தம், பக்தி, சமய சமரசம், உபநிஷத உண்மைகள், சைவம், வைணவம், ஞானக் கதைகள் ஆகிய கருத்துக்களைக் கொண்டது.

தற்கால நவீன மக்களின் மனப்போக்குக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் காட்டிய வழியில் சிறந்த மனிதர்களை உருவாக்குவது ஒன்றே இப்பத்திரிகையின் இலட்சியம்.

உங்கள் உள்ளம் உயர, நீங்கள் அவசியம் படிக்க வேண்டிய பத்திரிக்கை இது.

சந்தா விவரம்:

வருட சந்தா : ரூ 12

ஆயுள் சந்தா : ரூ 150

தனிப் பிரதி : ரூ 1-20

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

தேவைக்கு எழுதுங்கள்:

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் : சென்னை-600 004



உ

சொக்கலிங்கம் துணை

Sri Kasi Mutt Religious Charities Tirupanandal

PROPRIETOR & TRUSTEE

H.H. Sri-la-Sri Kasivasi Muthukumaraswami Tambiran Swamigal Avergal

திருப்பனந்தாள்

# ஸ்ரீ வீரியம்மன் பங்குனி உத்திரப்பெருவிழா

29—3—82 முதல் 4—4—82 வரை

திருவிழாக்காலங்களில் திருமுறைப்பணி செய்யும் இசைவாணர்கள்:-

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்,

1. திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்
தேவார இசைமணி திருவாவடுதுறை
2. திரு. S. முத்துக்கந்தசாமி
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.
திருமுறைக் கலாநிதி, இசைநம்பி
3. திரு. S. கல்யாண சுந்தர தேசிகர்..
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், கும்பகோணம்.
4. திரு. V. தியாகராசன், ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, திருப்பனந்தாள்;
5. திரு. A. சோமசுந்தரம், ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, திருப்பனந்தாள்;
6. திரு. S. A. கோபாலன் – வேய்ங்குழல், சிதம்பரம்.
7. திரு. S. L. சாமி - பிடில், திருச்சி.-
8. திரு. கோ. வேங்கடராமன் - மிருதங்கம் திருப்பனந்தாள்

*Sri Kasi Mutt Religious Charities Tirupanandal*

உத்திரவுப்படி,
*R. V. SUBRAMANIAM*
*Manager*

---

குறிப்பு:- திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் (1) 7—4—82ஆம் தேதி பங்குனி உத்திரத்தன்று திருவாரூரிலும் (2) 11-4-82 ஆம் தேதி காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரநாதர் பங்குனி உத்திரப்பெருவிழாவிலும் இன்னிசைத் திருமுறைக்கோஷ்டி. இரவில் நடத்தப்பெறும்;

உ

சொக்கலிங்கம் துணை

# திருவாரூரில் தேவார விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

அருளாணையின்வண்ணம் நடத்தப்பெறுவது

துன்மதி ஆ பங்குனி மீ உ(7-4-82) புதன்கிழமை

## பங்குனி உத்திரம்

ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூர் அகத்தடக்கி
பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீறு டறியுமன்றே.

—திருநாவுக்கரசர்.

திருமுறைவாணர்கள்:-

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்,
   திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,
   திருவாவடுதுறை
2. திரு. M. சுப்பிரமணிய முதலியார் திருவாரூர்.
   தேவார இசைமணி
3. திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சி.
4. திரு. S. L. சாமி — பிடில், திருச்சி.
5. திரு கோ. வேங்கடராமன் - மிருதங்கம், திருப்பனந்தாள்.

''ஆரூரமர்ந்த அரசே போற்றி''

*Sri Kasi Mutt*
*Religious Charities*
*Tirupanandal*

உத்திரவுப்படி
*R. V. SUBRAMANIAM*
*Manager.*

---

குறிப்பு:-நிறைசெல்வத் தியாகேசப் பெருமான் சந்நிதியில் இரவு 8-மணிக்குத் தொடங்கிச் சிவமே நிலவும் தேரோடு வீதியில் இரவு முழுவதும் இன்னிசைத் திருமுறை பாடி. மீண்டும் காலை 6-மணிக்கு வன்மீகநாதர் சந்நிதியில் பூர்த்தி செய்யப்பெறும்.

# சோமாஸ்கந்தமூர்த்தம்

ந. ரா. முருகவேள், M. A., M. O. L.

உமை-முருகு-இறைவர்:

சிவபெருமான், உயிர்களின் கருமேனி கழிப்பதன் பொருட்டுக் கொண்டருளிய திருமேனிகள் பலவற்றுள், சோமாஸ்கந்த மூர்த்தம் என்பது ஒன்று. சிவபெருமான், ஸ்கந்தமூர்த்தி எனப்படும் முருகனைத் தமக்கும், உமாதேவியாருக்கும் நடுவே இருக்கச் செய்து, எழுந்தருளி யிருக்கும் திருவுருவமே சோமாஸ்கந்தர் (ஸ + உமா + ஸ்கந்தர்) திரு வுருவம் எனப்படும். இதனை ''உமை + முருகு + இறைவர்'' எனவும் கூறலாம்.

தியாகராசர்:

சிவபெருமானை 'ராஜா' என்று பக்தர்கள் கூறி மகிழ்வதுண்டு; அந்தச் 'சிவராஜா', தில்லையில் 'நடராஜா' என்றும், திருவாரூரில் 'தியாகராஜா' என்றும் பெயர் பெற்று விளங்கு கின்றார். தில்லை நடராஜர் 'நின்று ஆடும் அழகர்'; திருவாரூர் தியாகராசர் 'இருந்து ஆடும் அழகர்'. திருவாரூர்த் தியாகராசர், சோமாஸ்கந்தர் என்னும் நிலையிலேயே, திருவுருவம் கொண்டு விளங்குகின்றார்.

குமரகுருபரர்:

குமரகுருபரசுவாமிகள், 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கியிருந்த தலைசிறந்த அருட்பெருங் கவிஞர். மதுரையிலிருந்து அரசு புரிந்த திருமலைநாயக்கமன்னர் (கி.பி. 1623–1659). குமரகுரு பர சுவாமிகளைப் பெரிதும் மதித்துப் போற்றி மகிழ்ந்தார். குமர குருபரர், தமிழ்நாட்டினின்று யாத்திரையாகச் சென்று, காசியில் நெடுங்காலம் வதிந்தவர்; காசியில் குமாரசுவாமி மடம் அமைத்தருளியவர்; திருச்செந்தூர் முருகனின் திருவருள் பெற்றவர்! இத்தகைய பெருஞ் சிறப்புமிக்க குமரகுருபரர், சோமாஸ்கந்த மூர்த்தம் பற்றி, ஓர் அழகிய இனிய கவிதை பாடி யுள்ளார்.

திரிவேணிசங்கமம்:

வடநாட்டில் உள்ள திரிவேணி சங்கமம் என்பது, மிகவும் புகழ் பெற்றதொன்றாகும். கங்கை யமுனை சரசுவதி என்னும் மூன்று பேராறுகளும், ஒன்று கலந்து கூடும் இடம், திரிவேணி சங்கமம் (திருமுக்கூடல்) எனப்படும். யாத்திரை செய்பவர்கள் அங்குச் சென்று நீராடுதலை மிகவும் சிறப்பாகக் கருதிப் போற்றுவர். குமரகுருபரர் வடஇந்தியாவில் நெடுங்காலம் வாழ்ந்திருந்தவர். ஆதலின், அவர் அவ்வப்போது திரிவேணி சங்கமம் சென்று, திருமுழுக்குச் செய்து மகிழ்ந்திருத்தல்கூடும். அதனால், திருவாரூரில் எழுந்தருளியுள்ள தியாகராசர் ஆகிய சோமாஸ்கந்தர் பற்றித், திருவாரூர் நான்மணி மாலையில் பாடத் தலைப்படுங்கால், குமரகுருபர் திரிவேணி சங்கமத்தினை நினைவுகூர்ந்து, இணைத்துஇயைத்து இனிது பாடுகின்றார்.

திருவாரூர் நான்மணிமாலை:

சிவபெருமான், உமாதேவி, முருகப்பெருமான் ஆகிய மூவரும், சோமாஸ்கந்த மூர்த்தமாக ஒருங்கே வீற்றிருத்தல், திரிவேணி சங்கமம் போன்ற அழகிய நல்ல காட்சியாகத் திகழ்கின்றது. சிவபெருமான் தன் மெய்யெல்லாம் வெண்ணீறு சண்ணித்திருத்தலால், வெண்மை நிறமுடைய கங்கையாற்றைப் போல விளங்குகின்றான். உமாதேவியார் தனது நீலநிறத்தால், யமுனை நதியைப் போலத் திகழ்கின்றாள்; சிவந்த நிறம் வாய்ந்த முருகனே, கலங்கிச் சிவந்து பெருகிவரும் சரசுவதி நதியைப் போலக் காணப்படுகின்றான்.

> "தம்மேனி வெண்பொடியால் தண்ணளியால் ஆரூரர்
> செம்மேனி கங்கைத் திருநதியே;– அம்மேனி
> மானே யமுனை; அந்த வாணிநதி யும்குமரன்
> தானே; குடைவேம் தனித்து"

இப் பாடலில் கங்கை யமுனை சரசுவதி என்னும் நதிகள் மூன்றும் முறையே, இறைவனும் இறைவியும் முருகனும் ஆகிய மூவருமாக உருவகம் செய்யப்பெற்றிருக்கும் திறம், அறிந்து இன்புறற்பாலது.

சச்சிதானந்தம்:

"நம் இந்திய நாட்டுப் பழம்பெரும் சான்றோர்களும், தத்துவ ஞானிகளும், தவநெறிச் செல்வர்களும் உலகையும் கடவுளையும் பற்றி ஆராய்ந்தறிந்து உணர்ந்திருந்த கருத்துக்கள் அனைத்தையும் 'சச்சிதானந்தம்' என்னும் சுருக்கம் மிக்க சிறிய அழகிய சொற்றொடர்

ஒன்றே, தெளிவுற விளக்கப் போதியதாகத் திகழ்கின்றது'' [1]என்று, நம் இந்திய நாட்டுப் பெருங்கவிஞரேறு ஆகிய இரவீந்திரநாத தாகூர் இயம்புவர்.

குமரகுருபரரும், குமரகுருதாசரும்:

உள்பொருள் ஆகத் திகழும் கடவுட்பொருள் ஒன்றே. சத்து சித்து ஆனந்தம் என்னும் முப்பெரும் பண்பும் கூறும் உடையதாக ஒளிர்கின்றது. சத்து உள்ளது, உண்மை. சித்து-அறிவு. ஆனந்தம் -இன்பம். ஆதலின் சச்சிதானந்தம் என்பதனைத் தமிழில் உண்மை-அறிவு-இன்பம் என்று வழங்குவர். இம் மூன்று இயல்புகளின் அழகிய சிறந்த பருமை வடிவ அமைப்பாக விளங்குவதே சோமாஸ்கந்தர் திருவுருவம் ஆகும். சோமாஸ்கந்த மூர்த்த நிலையில, சத்து-இறைவன்; சித்து-இறைவி; ஆனந்தம்-முருகன் என்று விளங்குதலை,

''மல்லல்வளம் கனிந்தபுகழ்க் கமலேசர் திருவுருவம், வாம பாகத்து
அல்லமர்பைங் குழல்உமையாள் திருவுருவம்; இருவருக்கும் அமுதம் ஆன
கொல்லயில்வேற் பசுங்குழவி திருவுருவும், அருளுருவாம்குணங்கள் மூன்றின்
நல்லுருவா தலின்அன்றோ, இவர்அகில காரணராய் நவில்கின் றரே!''

என்று நமது குமரகுருபரசுவாமிகளும்,

''பொருள்உள சத்து; நிரந்தரம் பொருவறும் அத்தை அணைந்தவிர்
அருள்உறு சித்து; நிரம்பிடும் அதிக மதர்ப்பெனும் இன்பமும்,

---

[1]''The view of this world which India has taken is summed up in one compound word *satchidanandam*. The meaning is that Reality, which is essentially one, has three phases. The first is *sat;* it is the simple fact things are, the fact which relates us to all things through the relationship of common existence. The second is *Chit;* it is the fact that we know, which relates us to all things through the relation ship of knowledge. The third is *Ananda;* it is the fact that we enjoy, which unites us with all things through the relationship of Love''.

—*Rabindranath Tagore*.

The Message of the Avanyakas.

ஒருமுகம் உற்றசோ லின்கண்முன் உளது சிவப்பொருள்; நள்ளது
திருவுறு சத்தி; நல் அந்தரம் திகழ்வது சுப்பிர மண்யமே!''

என்று பாம்பன் குமரகுருதாச சுவாமிகளும் அருளிச் செய்திருத்தல், இங்கு அறிந்து இன்புறத்தக்கது.

குடும்ப வாழ்வின் நலம்:

சோமாஸ்கந்த மூர்த்தம், தமிழ்நாட்டுக்கே தனிப்பெருஞ் சிறப்பாக உரியது. இந்தியநாட்டின் வேறுபிற எந்தப் பகுதியிலும் காணப்படாமல், தமிழ் நாட்டில் மட்டுமே, தனிப்பெருஞ் சிறப்பாகச் சோமாஸ்கந்தர் திருவுருவச் சிற்பங்கள் காணப்படுகின்றன என்று, ஆராய்ச்சியாளர்கள் (Prof. S. Ghurye, ''Gods and Men'') கூறுவர். சமண பௌத்த சமயங்களின் விளைவாகத் துறவறமே சால்புடைத்து என்னும் கொள்கை, பாரதநாடு முழுவதும் பெரிதும் பரவி வளர்ந்து வந்த நிலையில், மக்கட் சமுதாயம் வளம்குன்றி வாழ்விழந்து போகாமல் நிலைபெறுதற் பொருட்டுக், குடும்பவாழ்வின் நலங்களையும், இல்லறமே நல்லறமாதலையும் வலியுறுத்தித் தெளிவுறுத்துதல், பக்தி இயக்கத்தைப் பரப்பி நாட்டு மக்கள்பால் இறையருள் நெறியின் மறுமலர்ச்சியுணர்வு கிளர்ந்தெழச் செய்தருளிய, சைவசமய ஆசிரியர்களுக்குச் சிறந்ததொரு பெருங் கடமையாயிற்று. அவ்வகையிற் குடும்ப வாழ்வின் அளப்பரிய நலங்களையும், அரும்பெரும் சிறப்பினையும் விளக்குவதற்காகப், பெரிதும் போற்றிப் பரப்பப்பெற்ற வழிபாட்டுத் திருவுருவமே, சோமாஸ்கந்தமூர்த்தம் எனலாம்.

முடிவுரை:

இத்திருவுருவை அன்புடன் வழிபடுவோர் அனைவரும், கணவனும் மனைவியுமாய் இல்லற நெறிநின்று, இணையில்லாத இன்ப நலம் துய்த்து, நல்ல மகப்பேறும் குலவளர்ச்சியும் செல்வவளங்களும் பெற்று, இம்மையிற் சிறந்த வாழ்க்கை வாழ்வதுடன், முடிவில் எல்லையில்லா இன்ப விடுபேறும் எய்துவார்கள்;

''தொல்லை உலகம் போற்றெடுக்கும் சோமாற் கந்தர் தமைப் பணிவோர்
நல்ல மகவும் சந்தானத் தொடர்பும் இனிது நனிபெறுவார்''
—கச்சியப்ப முனிவர்.

# வாதவூர்த் தேசிகனின் வனப்புமிகும் உவமை நலம்

புலவர், முருகு. சுவாமிநாதன், பி.லிட்., (எம்.ஏ)

பல பொருள்களையும் பார்க்கின்ற கண்ணும் மனதும் அவற்றுள் அடிப்படையில் ஒற்றுமை உடைய பொருள்களை ஒப்பிட்டுக் காண்கின்றது. ஒப்பிட்டுப் பார்க்கும் இயல்பு எல்லோருக்கும் எல்லா இடத்திலும் ஏற்படும். துணிக் கடைக்குச் சரியான அளவுடன் செல்லாத ஒருவன் அங்கே தெருவில் செல்கின்ற சிறுவனைக் காட்டி 'அதோ போருனே பையன், அவனை மாதிரி உள்ளவனுக்கு எவ்வளவு துணி வேண்டும்' என்றும், கல்யாணத்துக்குச்சென்றுவந்த ஒருவன் மற்றொருவனிடம் 'மாப்பிள்ளைதானே' நம்ப அம்பி ராஜு இல்லே, அவனைப் போலவே இருக்கான், ஆனல் நிறம் மட்டும் கொஞ்சம் தூக்கல், என்று சொல்வதையும் நாம் அன்றாட உலகியலில் காண்கின்றோம். வழக்கியலில் உள்ளது போல இலக்கியங்களிலும் உவமை சிறப்புற கையாளப்படுகிறது.

'உபமானம்' என்ற சொல் ரிக் வேதத்தில் கூடஇருப்பதாகச் சொல்வர்.

உவமை என்பது ஒரு பொருளினை ஒரு பொருளோடு ஒப்பீடு செய்யும் முகமாக அப்பொருளின் வண்ணம், வடிவு, தொழில், பயன் முதலிய இயல்புகளை நன்கு புலப்படச் செய்தலாகும்; உவமையின் பயன் பற்றிக் கூற முற்பட்ட பேராசிரியர், 1. புலன் அல்லாதன புலன் ஆதலும் 2. அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும் என்பர்.

காட்டுப் பசுவினைக் காணுதவனுக்கு வீட்டுப் பசுவினைக் காட்டி இது போலத்தான் இருக்கும் காட்டுப்பசுவும் (ஆ போலும் ஆமா) என்புழி அது காணுதான் இது கொண்டு ஓரளவு புரிந்து கொள்ள முடியும். பின்னொரு காலே காட்டுப்பசுவைக் கண்டபோது இது முன்

காட்டிய விட்டுப் பசுவைப் போல உள்ளதால் இது காட்டுப் பசுவாகத்தான் இருக்கும் என ஒப்பிட்டு அறிகின்ருன்.

உவமைபற்றித் தண்டியலங்காரம்

'பண்பும் தொழிலும் பயனும் என்று இவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை'

என்னும்.

அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் தம் இலக்கியக் கலையில்,

''கவிதை சிறப்புற்று நன்கு வாழ உதவுவன உவமை (Simile) உருவகம் (Metaphor) முதலிய அணிகளாம்'' என்பர். மேலும் அவர்,

''உவமையணி இல்லாத கவிதையே இல்லை என்று கூறலாம். ஏனைய அணிகள் எல்லாம் அழிந்து இவ்வொன்று மட்டுமே எஞ்சி நின்ருலும் கவிதை சிறப்போடு இயங்கும்'' என்றும் குறிப்பிடுவர்.

இவை கொண்டு உவமையின் இயல்பையும், அதன் சிறப்பையும், இன்றியமையாமையையும் உணர முடிகின்றது. தமிழ் இலக்கியங்களில் உவமையின் பரப்பு கடற்பரப்பை விடப் பெரியது, எனவே 'திருவாசகம்' எனும் ஒரு நூலில் மட்டும் உவமைகளை ஆராயலாம் எனப்புகின் அதுவும் பரந்துபட்ட அளவினதாகலின் அதிலுள்ள 'நீத்தல் விண்ணப்பம்' எனும் பகுதியிலுள்ள உவமைநலங்களை மட்டும் கண்டு-காட்ட-விரும்புவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். எனவே இத்தலைப்பு முழுவதும் சேறலன்று, ஒருவழிச் சேறலேயாகும்.

திருவாசகச் செழுமறை தமிழின் திருமறை.தமிழரை மட்டுமன்றி அயன்மொழியினரை–அயல் நாட்டினரைக் கூட தன் பால் ஈர்த்துக் கொண்ட திறம் உடையது. அழுகடியடைந்த அன்பர் தனக்கும் திருப்பெருந்துறை இறைவற்கும் உள்ள உறவினையும், அவன் தன்னையாட்கொண்ட தன்மையினையும் தான் நெடுங்காலம் உலகத்து இன்பங்களில் ஆழ்ந்து பேரின்பம் துய்க்காது இழந்து விட்டதாகவும் மிகவும் அழகிய தோர்வகையில் திருவருள் அனுபவத்தைப் பொழிந்துள்ளார்.

உவமைகளைக் கவிதையில் நுழைக்கவேண்டும் என்று மிகவும் கடினப்பட்டு நுழைக்கின்ற இக்காலக்கவிஞர்களைக் காண்கின்ருேம்;

ஆனால் மணிவாசகரின் அநுபூதிப்பெருங்கடலில் உவமைகள் திருவருள் வயத்தான் தாமே வந்து அமைகின்றன. தன்னுணர்ச்சி-தன்னிரக்கப் பாடல்கள் (Lyric) ஆதலால் உவமைகள் இரக்க உணர்ச்சியை மிகு விக்கின்றன. அவை இயல்பாகவும், இயற்கைப் பொருள்களோடு தொடர்புடையனவாகவும், மிகைப்படுத்தலின்றியும் (exaggeration), அன்றாடவாழ்வில் காணுகின்ற பொருள்களாகவும் அமைந்துள்ளதால் எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளத் தக்கனவாக உள்ளன.

நிலம் காரணமாகவும், திறைப் பொருள் பெறவும், தமது வெற்றியை நிலைநாட்டவும் அந்நாளில் போர்கள் நிகழ்ந்தன. யானையின் மேல் ஏறிக் கொண்டும், குதிரையின் மேலிருந்தும், ரதம் ஏறியும் போர் நிகழ்த்தினர். போரிடையில் சிக்கியவர்கள் மடிவர். யானைகளும், குதிரைகளும் தன் உறுப்புக்களை இழத்தலும், உயிரையே இழத்தலும் உண்டு. அவ்வாறு நடக்கும் போரில் இடைப்பட்ட பெரிய பெரிய யானைகளும், குதிரைகளும் துயர்ப்படும் போது மிகவும் அற்பமான சிறியதான புதர் ஒன்று இடையில் இருந்தால் அது சிக்கி அழிவது உறுதியாகும். அதே போல ஐம்புலன்களின் வசப்பட்ட மனமானது மிகவும் அலைப்புறுகின்றது என்னும் வகையில்,

''ஆனைவெம் போரில் குறுந்தூறெென'' என்ற அழகிய உவமையை எடுத்தாள்கின்றார்.

தீயானது விரைந்து பரவவல்லது. காட்டில் மூங்கில் மரங்கள் வெடித்துத் தீப் பிடித்தல் உண்டு; அவ்வாறு பிடித்த தீ ஒரு சில மணி நேரங்களுக்குள்ளேயே எங்கெங்கும் சென்று காட்டையே அழித்து விடுதல் காடுகளுக்கு அடிக்கடி செல்கின்றோர் சகஜமாகக் காண்கின்ற காட்சியாகும். அவ்வாறு மிகுந்த வலிமை பெற்ற தீயின்முன் காடே அழியும் போது மென்மையான புற்கள் செறிந்த பொதும்பானது தீயில்பட்டால் எவ்வாறுகும் எனும் நிலையைச் கற்பனை செய்யின் அதன் அழிவு தெள்ளத் தெளிவாகத் தெரியும். ஐம்புலன்கள் பொழுவழிச் செல்ல அதனால் எழுகின்ற வேட்கையில் அழுந்தித்துன் புறுகின்றமைக்குந் பொதும்பிலே ஏற்பட்ட தீயினை அழகுறும் உவமையாக்கினர் மணிவாசகர்;

'பொதும்புறு தீப்போல்'

செறிவும் வன்மையும் கொண்ட பொதும்பு தீயில் பட்டகாலை அழியும்போது அனலின் அண்மையைப் பெற்றால் விரைந்து கரைந்து

உருகித் தன் இயல்பு அழிகின்ற விழுதானது முழங்குகின்ற பெரிய தீயில் பட்டால் அதன்கதி என்னாகும்? அதைப்போல அழகிய வேல் போன்ற கூரிய கண்களையுடைய பெண்களாகிய தீயில் வேட்கைத் தீவயப்பட்டு விழுந்த விழுதுபோன்ற நான் என்னிலைமை கெடுவேன்; உருகிக் கரைவேன்; அதனால் மேல்நிலை எய்துவிதற்குத் தேவையான பணிகளைச் செய்யமாட்டேன்; இறைவனை எண்ணமாட்டேன்; எண்ணம் திசைமாறி வேறுபொருளில் கவனம் உடையன் ஆனேன் என்பார்.

முரித் தழல் முழுகும்
விழுதனை யேனை

எனும் உவமை வாயிலாகத் தன் கருத்தை வெளிப்படுத்துவார்.

தாறு பொதும்பு, விழுது ஆகியவை அஃறிணைப் பொருள்கள்; அதனுள்ளும் சிறிதும் உணர்வற்றவை; அவற்றால் பிறர்க்குப் பயன் கிடையாது: ஆனால் தாவர வகையாகிய கொடி சிறிது உணர்வுடையது; பிறர்க்குக் காயும், கனியும், மலரும் தரவல்லது; ஆனாலும் அது தானே நிமிர்ந்து நிற்க வல்லது அன்று; ஏதேனும் ஒன்றைப் பற்றிநின்றே வளரும் தன்மையுடையது. அருகில் உள்ள பொருள்களைப் பற்றினால் அன்றி வளர வழியற்றதும்; மனித மனம் என்னதான் சிந்திக்கின்ற தன்மையைப் பெற்றிருந்தாலும், நாவானது பேசும் திறன் கொண்டிருந்தாலும், சிறந்த செயல்களைச் செய்ய உறுப்புக்கள் இருந்தாலும் அவை தம்மியல்பில் மேற்செல்வன அல்ல; அவ்வாறு சென்றால் வாழ்க்கை பயனற்றதாக பொருளில்லாததாக அமைந்து குறிக்கோளிலாது கெடும். அவ்வாறின்றி மேன்மைமிக்க வாழ்வு அமைய தெய்விக உணர்வும், சான்றோர் நூல்களில் பயிற்சியும், முதியோர்களின் நட்பும் இருத்தல் வேண்டும்; இவற்றைக் கொம்பாகக் கொண்டு நல்வாழ்வு என்னும் கொடி வளரும்.

கொம்பரில் 'லாக் கொடி போல்' எனும் உவமை வழியாகத் தன்னுடைய சார்பும் பற்றுக்கோடும் இல்லாது கெடுகின்ற அவல நிலையை விளக்குகின்றார் அமுதடியடைந்த அன்பர்.

(வளரும்)



# சைவ சித்தாந்தம்

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி
S. இராமலிங்கம், B.Sc., (Ag) B.L.,

கிரியை–சத்புத்ர மார்க்கம்:—கிரியா சாதனையின் இயல்பும் பயனும்: கிரியை என்பது இறைவனுக்குக் கோவில் அல்லது நம் இடத்தில் விக்ரகங்கள் வைத்து அபிஷேகம், ஆராதனை, அர்ச்சனை முதலிய வைகள் செய்வது. இது சத்புத்ரமார்க்கம் எனப்படும். இறைவன் அருகில் நின்று இந்தக் கைங்கர்யங்கள் செய்யப்படுவதால் இந்த நிலையைச் சாமீபம் எனப்படுவது. சமீபத்தில் அதாவது அருகில் உள்ள நிலை சாமீபம் என்பது. சிவஞான சித்தியார் செய்யுள் 272-ல்

''புத்திர மார்க்கம் புகவில் புதியவிரைப் போது
புகையொளி மஞ்சனம் அமுது முதல் கொண்டு ஐந்து
சுத்தி செய்து ஆசனம், மூர்த்தி, மூர்த்திமானும்
சோதியைப் பாவித்து ஆவாகித்து சுத்த
பத்தியினால் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில் வருகாரியம் பண்ணல்
நித்தமும் இக்கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்தன் அருகிலிருப்பர் நினையுங்காலே''

என்றுகிரியை பற்றி அருளப்பட்டுள்ளது:

புத்திரமார்க்கமாகிய கிரியா பாதமானது வாசனை மலர்கள், தூபம், தீபம், திருமஞ்சனம், திருவமுது முதலிய உபகரணங்களை அமைத்துக் கொண்டு, பூதசுத்தி முதலிய ஐந்து சுத்திகளைச் செய்து, ஆசனமிட்டு மூர்த்தியை எழுந்தருளச் செய்து மூர்த்திமானாகிய பரஞ்சோதியைப் பாவனை செய்து, ஆவாகித்து, மெய்யன்போடு ஹோமங்கள் முதலிய அக்கினி காரியங்களைச் செய்து முடித்தல் என்பதுஆகும்.

ஆராய்ந்து பார்க்கும்போது நாள்தோறும் இக்கிரியைகளைச் செய்பவர்கள் சிவனது சமீபத்தில் இருப்பதாகிய சாமீப பதவியை அடைவர். ஐந்து சுத்தி என்பது பூதசுத்தி (ஆன்மசுத்தி), தான சுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி ஆகும். பூதசுத்தியாவது பிருத்விமுதல் ஆகாயமீறாகிய பஞ்சபூதங்களை அவ்வப்பூதங்களின் நிறம், குணம், குறி, தெய்வம், வடிவங்கள் இவைகளோடு

தியானித்து. அப்பூதங்களுக்கு உரிய கலாமந்திரங்களை உரிய பீசங்களோடு உச்சரித்து அப்பூதங்களை விதிப்படிசுத்தி செய்தல் என்பது. இதை 36 தத்துவங்கள். தசகாரியம் என்னும் தலைப்புகளில் சிந்திக்கலாம். தான சுத்தியாவது பூசாஸ்தல சுத்தி எனப்படும். அது அஸ்திர மந்திரங்களாலே தாளத்ரயஞ்செய்து, அங்கு நின்றும், இடையூறகற்றி அஸ்திர மந்திரத்தால் அக்கின வண்ணமாகிய மதிலையும், கவச மந்திரத்தால் அகழையும் செய்துஅஸ்திர மந்திரத்தால் திக்கு பந்தனம் செய்வது. இது பூசை செய்யவெளியிருந்து, நம் உள்ளிருந்தும் வரும் இடையூறை அகற்றச் செய்வது.

திரவியசுத்தி என்பது பூஜா திரவியங்களைத் தக்க மந்திரங்களால் சுத்தி செய்வது.

மந்திரசுத்தியாவது பூசை செய்பவர் தன் ஆசனத்தில் சிவாசனமும், மார்பிற் சிவமூர்த்தியும் நியாசித்துச் சந்தன திலகமிட்டு மூல மந்திரத்தால் சிரசிலே புஷ்பமிட்டு பிரணவம் ஆதியாகவும் நம் அந்தமாகவும் பஞ்சமந்திரங்களை உச்சரித்தலாகும். இலிங்கசுத்தியாவது பூசாஸ்தல விடுத்தானம் கற்பித்து இலிங்கத்தை எழுந்தருளச் செய்து விதிப்படி பூசை செய்தல் ஆகும். அந்தரியாகம் எனும் அகப்பூசையும் உண்டு. இதை விரிவாகச் சிவபூசா விதிகளில் காண்க. நாம் இப்போது கிரியைமார்க்கத்தைப் பற்றி மட்டும் சிந்திப்பதால் அதை மட்டும் குறிப்பிடப்படுகிறது. இதரவிவரங்கள் எல்லாம் பின்வரும் அத்யாயங்களில் காணலாம் தாயுமானவர் இதை,

''பஞ்சசுத்தி செய்து நின்னைப் பாவித்துப் பூசை
செய்தால் விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே''

என்று அருளுகிறுர்.

கிரியையிலே புறப்பூசை, அகப்பூசை (ஞானபூசை) என இரு வகைப்படும்.

புறப்பூசை, அகப்பூசை என்னும் இரண்டாலும், அரு, அருவுருவம், உருவத்திருமேனியை நோக்கிப் பூசை செய்து வழிபாடு செய்வது கிரியை எனப்படும். உபாயப் பூசையின் பூசனையின் இயல்பும் பயனும் பற்றிச் சித்தியார் பாட்டு 302ல்.

''புறம்பேயும் அரன் கழல்கள் பூசிக்க வேண்டின்
பூமரத்தின் கீழ் உதிர்ந்த போதுகளும் கொண்டு
சிறந்து ஆடும் சீர்ச்சிவனை அங்கு ஞானத்தால் சிந்திக்கும்படி
இங்கு சிந்தித்துப் போற்றி

அறம்பாவங்கட்கு நாம்என் கடவேம் என்றும்,
ஆண்டவனைக்கண்டக்கால் அகம் புறம் என்னுது
திறம் போதே பணி செய்து நிற்கையன்றே
சிரடியார் தம்முடைய செய்திதானே''

என்று அருளப்பட்டுள்ளது.

எரிகயில் வருகாரியம் பண்ணல் அதாவது ஹோமம் வளர்த்து யாகம் முதலியவைகள் செய்வதும் கிரியையாகும். ஞானசம்பந்தர் பெருமான்.

''கற்ருங்கு எரியோம்பிக் கலியை வாராமே செற்ருர்'' என்றும்,
''பறப்பைப்படுத் தெங்கும் பசுவேட்டு எரிஓம்பும்'' என்றும்

திருமந்திரத்தில், திருமூலர்

'' ஊட்டவியாவன உள்ளம் குளிர்விக்கும்
பாட்டு, அவிகாட்டுதும் பால் அவியாமே''என்றும்,

நாவுக்கரசர், முன் அத்தியாயத்தில் குறிப்பிட்ட '' உடம்பெனும் மனையகத்துள்'' எனும் பாட்டில்

'' மடம்படும் உணர்நெய் அட்டி உயிர் எனும் திரிமயக்கி
'' இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்''

என்றும் எரியில் வருகாரியம் பண்ணுதல் பற்றிச் சிறப்பாகச் சொல்லு கிருர்கள்.

நாவுக்கரசர் அந்த எரியில் சிவபோதத்தை அவிசாக இடப்படு படுவதைக் காட்டி அருள்கிருர்கள்,

இக்கிரியா நெறியினை அதற்கு இலக்கியமாய் ஒழுகிக் காட்டிய ஞானசம்பந்தப் பெருமான்,

'' நறை மலிதரு மனரெுடு முகைநகுமலர் புன்கமிகுவளரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடுமடியவர்
குறைவில் பதமணை தரவருள் குணமுடை இறையுறைவனபதி
சிறை புனலமர் சிவபுரமது நினைபவர் செயமகள் தலைவரே''

எனவும்,

''செம்பொன் செய்மாளியும் வாசிகையுந்திருந்து புகையும்
அவியும் பாட்டும்,
நம்பும் பெருமை நள்ளாறுடைய நம் பெருமானிது வென்
கொல் சொல்லாய்,
உம்பரு நாகருலகந்தானுமொலிகடல் சூழ்ந்தஉலகத் தோரும்,
அம்புத நாள்களாவிடுங்கூடலால வாயின் கண்அமர்ந்தாரே''
எனவும்,

'காவினையிட்டுங் குளம்பல தொட்டும் கனிமனத்தால்,ஏவினையால் எயில் மூன்றெரித்தீர் என்றிரு பொழுது, பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாயடியோம், தீவினை வந்து எமைத்தீண்டப் பெறுதிரு நீலகண்டம்'' எனவும்,

'' தோத்திரமா மணலிங்கத் தொடங்கிய வானிரையிற்பால்,
பாத்திரமா
வாட்டுதலும், பரஞ்சோதி பரிந்தருளி ஆத்தமென
மறைநால்வர்க்
கறம்புரி நூலென்றுரைத்த தீர்த்தமல்கு சடையாரும்
திருவேட்டக்குடியாரே''
எனவும் அருளியுள்ளார். திருமூலர்மந்திரத்தில்,

'' பூசத்தில், வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்றநற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித்தட்டன்னமும் நீ சுத்தி செய்தன் மற்று
ஆசற்ற சற்புத்திர மார்க்கமாகுமே'' எனவும்,
'' திருமன்னுஞ் சற்புத்திரகுமார்க்கசரியை
உருமன்னிவாழும் உலகத்தீர் கேண்மின்
கருமன்னு பாசங்கை கூம்பத்தொழுது
இருமன்னு நாடோறும் இன்புற்றிருந்தே''
எனவும் அருளியுள்ளார். துகளறு போதத்தில் கிரியை (சற்புத்திர மார்க்கம்) பற்றி

''புத்திரமார்க்கம் புகை ஒளிமஞ்சனம் பூ
வைத்து அமுது தாம்பூலம் மற்றெவையும்-உத்தமமாய்த்
தேடி. வைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடவத்திற் செல்லாமல்நாள்''
எனவும்,
'' சுத்தி ஐந்தும் செய்து துகள் தீரும் மந்திரத்தால்

அத்தமது பத்துமுகம் ஐந்தாக-வைத்து வைத்து
வித்தியா தேகம் விதிப்படியில் தாபித்துப்
பத்தியால் மேனிதனைப்பார்' எனவும்'
'' பார்த்ததிரு மேனிப் படி கந்தனில் பானைக்
கோத்ததிருமந்திரத்தால் கொண்டுவந்து பார்த்தருளச்
சொல்லிற் பராக்கறத்துச் சோதி சிவாகமத்தின்
சொல்லிற் படியே தொடங்கு'' எனவும்,
'' சோராமல் பூசித்துச் சொன்னப்படி நில் இதழித்
தாரார் சமீபத்தில் தான் இருந்து-வாராமல்
தானே பரன் அளிக்குஞ் சங்கரனுர் இம்முத்தி
தானே தரினுந்தரும்''
எனவும் அருளப்பட்டுள்ளது.

ஆகவே கிரியை மார்க்கம் நம் இந்திரியங்கள், கரணங்கள் இவைகளைச் சிவன்பால் ஈடுபடுத்தி பசு கரணங்கள் சிவகரணங்களாக மாற்றி அக்கரணங்களால் ஏற்படும் தடைகளை நீக்கி ஞானமார்க்கத்திற்கு அழைத்துச் செல்கிறது.

*************************

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### இதய வலிக்கு

1) தாமரை, செம்பருத்திப்பூ, இவ்விரண்டையும் கஷாயம் வைத்துச் சாப்பிட இதயவலி குணமாகும்.

### பித்த வெடிப்புக்கு

2) இலுப்பைநெய், முந்திரிஎண்ணெ, விளக்கெண்ணெ இவைகளில் ஏதாவது ஒன்றைத் தடவிவரப் பித்த வெடிப்பு குணமாகும்.

### நகத்தில் விழும் சொத்தைக்கு

3) மருத்தோன்றி இலையை(மருதாணித்) தண்ணீர் விட்டு அரைத்து நகத்தில் 3நாள் கட்டித் தண்ணீர் படாமல் வைத்திருக்க சொத்தை நகம் சுத்தமாகும்.

Dr. N. சடையப்பன், S.M.P.

*************************

# சிவ கதி

'சிவபாதசேகரன்'

[செயலர், திருவாதிரையான் திருவருட்சபை, சென்னை]

கறைக்கண்டனைக் கரும்பெனவும், கட்டியெனவும், கனியெனவும் உவகை பொங்க அழைப்பதுண்டு. எல்லாப் பொருள்களிலும் விளங்கும் பரம்பொருளை அவ்வப் பொருள்களின் பெயர்களால் அழைப்பதிலும் ஆன்றோர்கள் இன்பம் கண்டனர். 'இறைவனை ஏணி' என்று கூறுவதிலும் பொருத்தம் இருப்பதைக் காண்கிறார் திருநாவுக்கரசர். தனது அடியார்களுக்கு முத்தியைக் காட்டும் அசாதாரண ஏணியாகத் திகழ்கிறான் ஈசன்.

''பித்தராம் அடியார்க்கு முத்திகாட்டும் ஏணி''

என்கிறது நாவரசர் தேவாரம். முத்திவரம் கொடுக்குமுன் தனது அடியவனின் மனத்தையும் செயலையும் ஆய்ந்து அவனது பக்குவத்திற்கேற்ப அந்நெறியைத் தந்தருளுவான் பரமன். இதனை,

''அடிமையை அளப்பர்''

''அளக்கு நெறியினன் அன்பர்கள் தம்மனத்து ஆய்ந்து
கொள்வான்''

என்ற தேவாரத் தொடர்கள் உணர்த்துவதைக் காணலாம். அழுது காமுற்று அரற்றும் அடியவர்களையும், தன்னைப் புறக்கணிக்கும் மூடர்களையும் ஈசன் கணக்கெழுதி வைப்பதாக அப்பர் அருளுவார்:

முத்தியாவது சிவலோகப்பேறு என்று பெறப்படும். சிவலோகத்தே இருந்து சிவலோகநாதனுக்கு அடிமைசெய்யும் ''முடிவில் வாழ்க்கைக்கு'' ஏங்குகின்றார் அப்பர் பெருமான்.

செம்மை வெண்ணீறு பூசுஞ் சிவனவன் தேவதேவன்
வெம்மை நோய் வினைகள் தீர்க்கும் விகிர்தனுக்கார்வமெய்தி
அம்மை நின்றடிமை செய்யா வடிவிலா முடிவில் வாழ்க்கைக்கு
இம்மை நின்றுருகுகின்றே னென் செய்வான் தோன்றினேனே:

ஐம்புலன்களால் ஆட்டுண்டு வேதனைக்குழியில் விழுவதை விரும்பாமல் சிவகதியை விரும்பும் எண்ணம் முற்பிறவிகளில் செய்த சிவபுண்ணியங்களால் மட்டுமே உண்டாகும். பிறவிதோறும் செய்கின்ற பாவச்செயல்கள் எண்ணற்றவை. புதிதுபுதிதாகப் பாவங்களே செய்து பாழ்நரகக் குழிக்கே விரையத் தூண்டுவன ஐம்புலன்கள். இதனை வாகீசப் பெருந்தகை,

''பாவம்தன்னை ஈட்டினேன் களையமாட்டேன் என்செய்வான் தோன்றினேனே''

என்று நெஞ்சுருகப் பாடுகிறார். ஒன்பது வாயிற்குடிலைக் கோலமென ஓம்பாது இடையறு அன்புடன் அவிர்சடைக்கடவுளுக்கு ஆட்பட்டால் சிவகதி விளைவது திண்ணம். நாயினுங்கடையாய உயிர்களுக்கும் புன்னெறி காட்டி உய்விக்கும் தயை இறைவன் ஒருவனிடத்தே மட்டும் உண்டு ஆண்டு அருளும் அங்கணனையும் புறக்கணிப்பன, பாசவலையுட்பட்ட உயிர்கள். பாசவலையுட்பட்டுப் பதியை நினையாது காலம் தள்ளுபவனாகத் தன்னை இழிவுபடுத்திக் கூறிக்கொள்கிறார் அப்பரடிகள்.

வஞ்சகப் புலையனேனை வழியறத் தொண்டிற் பூட்டி
அஞ்சலென் றாண்டு கொண்டாய் அதுவுநின்பெருமையன்றே
நெஞ்சகங் கனிய மாட்டேன் நின்னையுள் வைக்கமாட்டேன்
நஞ்சிடங்கொண்ட கண்டா என்னென நன்மை தானே.

சிவலோகம் கிடைப்பதற்கான வழிகளையும் எடுத்துரைக்கிறார் தாண்டக வேந்தர். சிவத்தலங்களின் பெயர்களைச் சொன்னால் சிவலோகம் சித்திக்கும் என்பது அவரது அருளுரைகளில் ஒன்றாகும். தான்பாடுகின்ற தலத்தின் பாடல்களிலேயே பிற தலங்களின் பெயர்களைக் குறிப்பிடுவதை இவர் அருளிச்செய்த திருத்தாண்டகங்களில் மிகுதியாகக் காணலாம். தலங்களின் பெயர்களைச் சொல்லும்போது மனம் ஒருகணம் அவற்றை எண்ணிப்பார்க்கிறது. அத்தலத்தின் பெருமையிலும், அதில் கோயில் கொண்டு அருளும் இறைவனிடத்திலும் லயிக்கிறது. உள்ளம் ஒன்ற ஒன்ற, உணர்வுகள் தூய்மையாகின்றன. உணர்வுகள் தூய்மையானதும் உடலை ஓம்பு தலகன்று, உள்ளத்தைப் பெருங்கோயிலாகக் கொண்ட ஈசனை ஓம்பும் எண்ணம் உதயமாகிறது. அந்த எண்ணம் வலுப்பெற்றவுடன் வல்வினைகள் அகல ஆரம்பிக்கின்றன. இறைவனை மறந்தாலும் நாக்கு, பழக்கத்தினால் ஐந்தெழுத்தைச் சொல்லும் உரிய நிலை ஏற்படுகின்றது. இப்பக்குவம் ஏற்பட்ட உயிர்கள் சிவலோகம் பெறுவது

எளிதாகி விடுகின்றது. இவ்வளவுக்கும் அடிப்படையாகத் திகழ்வது, சிவநாதத்தையும், பெருமான் வீற்றிருந்து அருளும் தலங்களின் பெயர்களையும் கூறுவது என்பதை, உழவாரப்படையாளியாம் அப்பர் பெருமான்.

''நல்ல நல்லம் எனும் பெயர் நாவினல் சொல்ல வல்லவர் தூயநெறி சேர்வரே''

''ஐயாறே ஐயாறே என்பீராகில் அல்லல் தீர்ந்து அமருலகம் ஆளலாமே''

''வலஞ்சுழியே வலஞ்சுழியே என்பீராகில் வல்வினைகள் தீர்ந்து வானுளலாமே''

''குடமூக்கே குடமூக்கே என்பீராகில் கொடுவினைகள் தீர்ந்து அரனைக் குறுகலாமே''

''எந்தையார் திருநாமம் நமச்சிவாய என்றெழுவார்க்கிரு விசும்பிலிருக்கலாமே''

எனப் பல இடங்களில் அருளிச் செய்திருப்பதால் அறியலாம்.

பாட்டுக்கு இரங்கும் பண்புடையவனுதலின் இறைவனைப் பண்ணொன்றப் பாடினல் சிவகதி கிடைக்கும் என்பது அப்பரடிகளின் மற்றோர் அருள்வாக்கு. இக்கருத்தைக் திருக்கோளிலித் திருப்பகத்தில் காணலாம்.

கேடு மூடிக் கிடந்துண்ணும் நாடது
தேடி நீர் திரியாதே சிவகதி
கூடலாந் திருக்கோளிலி ஈசனைப்
பாடு மின்னிர வோடு பகலுமே

மலர்தூவித் தொழுவோரும் இறுதியில் சிவகதி பெறுவர் என்பதால் அங்ஙனம் பணிசெய்து நற்கதி பெற்றுய்யுமாறு உபதேசம் செய்வதைப் பிறிதோரிடத்தில் காணலாம்.

வெண்மையான வினைக்கடல் நீங்கிநீர்
செம்மையாய சிவகதி சேரலாம்
கம்மையார் மலர் தூவித்தொழுமினே
நம்மை யாளுடை யானிடம் நல்லமே.

சிவநாமங்களைக் கூறியும், அவனை மலரிட்டு அருச்சித்தும், பாடியும் சிவகதி பெறுவது நிச்சயம் என்பதை அப்பர் தேவாரம் மேற் கண்டவாறு உணர்த்துகின்றது. இந்நெறிகளை மேற்கொண்டு சிவகதியை அடைய விழைவது இறைவனது அருளில்லாமல் ஈடேருது செல்லாதநெறி செலுத்தவல்ல சிவலோகனின் இத்தன்மையையும், ''செல்ல நல்ல சிவலோக நெறி வகுத்துக் காட்டுவான்'' என்று திருநாவுக்கரசரே கூறுவதால், சிவலோக நெறி அறிய சிந்தையை வழங்குமாறு வேண்டத்தக்கதொன்றே சிறப்புடையத்தாகும்.

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., திருப்பனந்தாள்.

**மறைஞானசம்பந்தர்**

6. பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை ஆண்ட
சைவசிகா மணிமருதத் தலைவன் அம்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதில்மீதே மதியம்
கடவாமை நெடுங்கொடியின் கரம்தகையும் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை
திருவளரும் மலரடிகள் சென்னி வைப்பாம்.

(தெ-ரை.) இந்நிலவுலகம் விளக்கம் பெறவும் ஆயிரம் சாகையாய் வளர்ந்திருக்கும் சாமவேதம் பொலிவுபெற்று இலங்கவும், பராசர முனிவருடைய மரபு செழிக்கவும், எம்போன்றார்க்கும் பற்றுக் கோடாக நின்று அருளவும் தோன்றியருளியவரும், எம்மை அடிமை யாகக் கொண்ட சைவசிகாமணியும், மருதூர்த் தலைவரும், அழகிய தண்ணிதான மேகங்கள் சூழும் பொழில்கள் அருகே சூழ்ந்து விளங்கும் மதிலின்மேல் தண்கதிர் மதியம் கடந்து செல்லாதவாறு தம் நெடிய கொடிகளாகிய கைகளால் தடுத்து நிறுத்தும் பெண்ணு கடத்தில் வாழ்ந்தவருமான மிகுபுகழ் அமைந்த மறைஞான சம்பந்தன் என்னும் எமது ஞானத்தந்தையின் அழகு பொருந்திய மலரனைய திருவடிகளைத் தலைமேற் கொள்வாம்.

மறைஞானசம்பந்தர் தோன்றியருளியமையால் சைவநெறி மேலும் விளக்கம் பெற்றது. ஆதலின் 'பார்திகழ' என்றார். சாமவேதம் ஆயிரம் சாகை உடையது. பதினாறு உபநிடதங்களைக் கொண்டது. உயிர்கள் உய்வதற்குரிய நெறிகளை விரிவாகக் கூறுவது. இத்தகைய வேதத்தை நாளும் நினைந்துவரும் வாய்ப்பினை இயல் பாகவே கொண்ட மரபில் வாழ்ந்தவர் மறைஞான சம்பந்தர்.

இவர் தோன்றியதால் பராசரமுனிவர் கோத்திரத்திற்கு ஒப்பற்ற பெருமை கிட்டியது. ஆதலின் 'வளர்சாமவேதம் மல்கப், பராசர மாமுனி மரபு பயில' எனச் சிறப்பித்தார் ஆசிரியர். சார்புணர்ந்து சார்புகெட ஒழுகிய சீலத்தால் தம்மைச் சார்ந்தார்க்கும் ஞானச் சார்பினை வழங்கி அருளுவாராயினர். சார்பு-பற்றுக்கோடு. மருதத் தலைவன்-மருதூரில் தோன்றிய தலைவன். தோன்றிய இடம் இதுவாயினும் தன் குருமூர்த்திகளால் ஆட்கொள்ளப்பெற்ற இடம் பெண்ணாகடம் ஆகும். ஆதலின் அத்திருப்பதியையும் ஆசிரியர் சிறப்பித்துக் கூறுவாராயினர். மதில் மதியம் கடவாது தகைக்கும் என்றது உயிர்கள் ஆணவச் செருக்குற்று அலையாது தம் அருள் தகைமைகாட்டி ஆட்கொள்ளும் குருவருட் செயலைக் காட்டுவதாகும்.

## நுதலியபொருள்

7\. புறச்சமயத்தவர்க்கு இருளாய் அகச்சமயத்து ஒளியாய்ப்
புகல்அளவைக்கு அளவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோல் பேதமும் சொற்பொருள்போல்
பேதா பேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடல்உயிர்கண் அருக்கன்
அறிவு ஒளிபோல் பிறிவரும் அத்துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்கல் உற்றாம்.

(தெ-ரை) புறப்புறச் சமயத்தார் புறச் சமயத்தார் அகப்புறச் சமயத்தார் எனக் கூறப்பெறும் பதினெண்மருக்கும் அறிதற்கரிய பொருளாய், அகச்சமயத்தார் எனப்பெறும் அறுவர்க்கும், அறிதற் குரியதாய், அளவை நூல்களில் கூறப்பெறும் அளவைகளால் அளவிட்டு அறியப்படுவதாய், பொன்னானது பல அணிகளாகும் தன்மைபோலப் பிரமமும் பல உயிர்களாய்த் தோன்றி நிற்கும் என்னும் வேறு பாடின்மை (அபேதவாதம்) கொள்ளும் கொள்கை இல்லாததாய் இருளும் வெளியும் போல இறைவனும் உயிர்களும் என்றும் வேறாக இருப்பன என்னும் வேறுபாட்டுக் (பேதம்) கொள்கையும் சொல்லும் பொருளும் போல ஒருவாற்றான் ஒன்றாயும் பிறிதொருவாற்றான் வேறுபட்டும் நிற்கும் எனும் ஒற்றுமையும் வேற்றுமையும் (பேதாபேதம்) கொள்ளும் என்னும் கொள்கையும் இல்லாததாய், சிறப்பு நூலாகிய ஆகமங்கள் அருளும் குருவழிபாடு முதலிய வழிபாட்டின் பயனால் விளைவதாய் உடலும் உயிரும் போலவும்

கண்ணும் கதிரவனும் போலவும் உயிரறிவும் கண்ணொளியும் போலவும் பிரிவின்றி இயையும் சிறப்பினை உடையதாய் வேதமுடிபில் கூறப்பட்ட தெளிவான சைவசித்தாந்தத்தின் உண்மையை இந்நூற்கண் விளங்கச் சொல்லுவாம்.

இந்திய நாட்டில் தோன்றிய சமயங்கள் இருபத்து நான்கென்பர். இவற்றைப் புறப்புறச்சமயம், புறச் சமயம், அகப்புறச் சமயம், அகச் சமயம் என நால்வகையுள் அடக்குவர். புறப்புறச் சமயம்:- வேதங்களையும் சிவாகமங்களையும் ஒப்புக்கொள்ளாத சமயங்கள் இவ்வகையுள் அடங்கும். அவை உலோகாயதம் மாத்தியமிகம் யோகசாரம் சௌத்திராந்திகம் வைபாடிகம் சமணம் என்பன. புறச் சமயம்:- பொதுவகையால் வேதத்தை ஒப்புக்கொள்ளாத சமயங்கள் இவ்வகையுள் அடங்கும். அவை தார்க்கிகம் மீமாஞ்சகம் ஏகான்மவாதம் சாங்கியம் யோகம் பாஞ்சராத்திரிகம் என்பன. அகப்புறச் சமயம்:- வேதம் சிவாகமம் ஆகிய இரண்டையும் ஒப்புக்கொள்வதுடன் அவற்றிற்கு வேறாகிய பாசுபதம் முதலிய நூல்களையும் உண்மை தெளிதற்குரியனவாகக் கொள்ளும் சமயங்கள் இவ்வகையுள் அடங்கும். அவை பாசுபதம் மாவிரதம் காபாலம் வாமம் வைரவம் ஐக்கியவாத சைவம் என்பனவாம். அகச்சமயம்:- வேதம் சிவாகமம் ஆகிய இரண்டையும் ஒப்புக்கொண்டு வீடுபேற்று நிலையில் மட்டும் வேறுபடும் சமயங்கள் இவ்வகையுள் அடங்கும். அவை பாடாணவாதம் பேதவாதம் சிவசமவாதம் சிவசங்கிராந்தவாதம் ஈசுவர அவிகார வாதம் நிமித்தகாரண பரிணமவாதம் என்பன. இந்நால்வகையினருள் முதல் மூவகையினரும் வேதாகமங்களை முழுமையாக ஏற்றுக் கொள்ளாதவராயும் ஓரொரு கூற்றினை மட்டும் ஏற்பவராயும் இருத்தலின் அவர்க்கு இறை உயிர் தளை ஆகிய முப்பொருள்களின் உண்மை முழுமையாகவும் நெறியாகவும் அறிய இயலாது. ஆதலின் 'புறச் சமயத்தவர்க்கு இருளாய்' என்றார். அகச் சமயத்தார் சித்தாந்த சைவரொடு ஒப்ப முப்பொருள் உண்மையை ஒப்புக்கொள்பவர் ஆதலின் அவர்க்கு அவ்வுண்மை அறியப்படும் என்பார் 'அகச்சமயத்து ஒளியாய்' என்றார். காண்டல் கருதல் உரை என அளவை மூவகைப்படும். அம்மூவகையானும் அளவிட்டு அறிதற்குரியதாய் இருத்தலின் 'அளவைக்கு அளவாகி' என்றார். பொன் அணியாதல்போல பிரமமே உயிராகும் என்பர் மாயாவாதிகள். பிரமமே உயிராயின் அப்பிரமத்தின் தன்மை உயிரிடத்தில் விளங்க வேண்டும். அவ்வாறு இன்மை தெள்ளிது. இருளும் ஒளியும்போல் உயிரும் இறைவனும் வேறு என்பர் மாத்துவர். இருளும் ஒளியும் ஒருங்குநிற்பனவல்ல; ஒன்று தோன்றியபொழுது

பிறிதொன்று இல்லாதாகும். உயிரும் இறைவனும் அவ்வாறின்மை தெள்ளிது. சொல்லும் பொருளும்போல இறைவனும் உயிரும் ஒருவாற்ருன் ஒன்ருயும் பிறிதொருவாற்ருன் வேருயும் நிற்கும் என்பர் பாஞ்சராத்திரிகர். சொல் வாக்கிடத்தும் பொருள் அதற்கு வேருய இடத்தும் இருப்பன. இறைவனும் உயிரும் வேறு வேருகிய இடத்து இன்மை தெள்ளிது. சைவசித்தாந்தம் இறைவனும் உயிரும் வேருனவை என்று கொள்ளும். ஆயினும் இறைவனின் உதவி யுடனேயே உயிர் இயங்கும். உயிர் நிலைத்தற்பொருட்டு அதனிடத்து இறைவன் ஒன்ருய் நிற்பன். அத்தொடர்பு உடலும் உயிரும் போல் வதாம். உயிர் பொருள்களை அறிதற்பொருட்டு வேருக நிற்பன். அத்தொடர்பு கண்ணொளியும் கதிரவனும் போல்வதாம். உயிர் துய்த்தற்கு இறைவன் உடனுய் நிற்பன். அத்தொடர்பு உயிரறிவும் கண்ணொளியும் போல்வதாம். அத்துவிதம்—பிரிவின்றி இயைந்து நிற்கும் தன்மை. பண்ணும் இசையும் போலவும், பழமும் சுவையும் போலவும், இறையும் உயிரும் வேறற நிற்கும். பெருநூல்—ஆகமம். அதுகூறும் அறத் திறமாவன புறவழிபாடு முதலிய (சரியை கிரியை யோகம்) மூன்றும். அவற்றின் பயனுக அறிதற்குரியதே சித்தாந்தச் செந்நெறியாகும். என்பார் 'அறத் திறனுல் விளைவதாய்' என்ருர்: வேதம் உபநிடதங்கள் ஆகியவற்றில் ஒன்றற்கொன்று முரண்படுமாறு அமைந்த கருத்துக்கள் பல உள்ளன. அக்கருத்துக்கள் ஒன்றற் கொன்று முரணுகாதவாறும் கோர்வைப்படவும் கூறுவதே சைவ சித்தாந்தமாகும். ஆதலின் 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்' என்ருர்.

### கேட்போரும் பயனும்

8. மூவகை ஆருயிர் வர்க்கம் மலத்தார் கன்ம
 மூலமலத்தார் மூன்றும் உடையார் அன்றே
 நீவகமாம் என உருவாய் வந்து நாதன்
 திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
 பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
 பரவிவரும் அவுத்திரியால் பாச நாசம்
 மேவஅருள் உதவும் அவுத்திரி இரண்டு திறனும்
 வியன்கிரியை ஞானம்என விளம்பு மாறே.

(தெ-ரை) எண்ணிறந்த உயிரினம் மூவகைப்படும்; அவர் ஆணவ மலம் ஒன்றே உடைய விஞ்ஞானகலர், கன்மமும் ஆணவமும்,

ஆகிய இருமலமுடைய பிரளயாகலர், ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலமுடைய சகலர் என்போராவர். அவர்களுள் சகலருக்கு, இறைவன் விலங்குகளைப் பிடித்தற்குரிய பார்வை விலங்கெனத் திருவுருக்கொண்டு தன் திருநோக்காலும் தீண்டுதலாலும் திருவாக்காலும் உயர்வு குறித்து எண்ணும் எண்ணத்தாலும் ஞான நூல்களாலும் ஒருமை உணர்வு கொள்ளச் செய்யும் அறவுரையானும் மந்திரம் கொண்டு ஓமத்தீ வளர்த்துச் செய்யும் செயல் முறையானும் மலநீக்கம் செய்வன். எரியோம்பிச் செய்யும் செயல்முறையை மனத்தகத்துக் கொண்டும் செய்யலாம். புறத்தே வைத்தும் செய்யலாம். இவற்றுள் முன்னையதை ஞானவதி என்பர் பின்னையதைக் கிரியாவதி என்பர்.

கலர்—கலையை உடையவர். கலை முதலிய தத்துவங்களோடு கூடியிருக்கும் உயிர்கள் சகலர் எனப்படுவர். இக்கலை முதலிய தத்துவக் கூட்டைப் பிரளயத்தில் நீங்கப் பெற்றவர் பிரளயாகலர் ஆவர். இக்கூட்டினை மிகுந்த அருளறிவால் (விஞ்ஞானத்தால்) விஞ்ஞானம்—மேலாய அருள் ஞானம் : பதிஞானம். நீங்கப்பெற்றவர் விஞ்ஞானகலர் ஆவர். பிரளய அகலர் விஞ்ஞான அகலர் எனப் பிரித்துப் பொருள் காண்பர். தீவகம்—பார்வை; விலங்கினங்களைப் பிடித்தற்கு அவ்வவ் விலங்குகளில் ஒன்றைப் பழக்கப் படுத்தி அவற்றால் அவ்வவ் விலங்குகளைப் பிடிப்பர். 'பார்வைஎன மாக்களை முன்பற்றிப் பிடித்தற்காம் போர்வை எனக் காணார் புவி' என்னும் திருவருட்பயனும். மான்காட்டி மானைப் பிடிப்பது போன்று இறைவனும் எவரெவர் எத்திறத்தராய் நிற்பினும் அவரவரையும் அவ்வத் திறத்து ஆட்கொள்ளுவன். ஏறுடை ஈசன் இப்புவனியை உய்ய நூறு நூறுயிரம் இயல்பினன் ஆகி வருவன் எனத் திருவாசகமும் கூறும். தீவகம்—விளக்கு எனப் பொருள் கோடலும் ஆம். குருவாகி எழுந்தருளி வரும் இறைவன் உயிர்க்கு உற்ற மலங்களை எழுவகையால் நீக்கி அருளுவன். 1. திருநோக்கம்—தன் அருட் பார்வையால் மல நீக்கம் செய்வது. 2. தீண்டல்—தனது திருக்கைகளினுலோ திருவடியினுலோ தீண்டிமலநீக்கம் செய்வது. 3. திருவாக்கு—திருவைந்தெழுத்தை அருளி மலநீக்கம் செய்வது. 4. உயர்வு குறித்து எண்ணும் எண்ணம் (பாவனை)—அருளுருவாய் மனத்தகத்து எண்ணுதலால் மல நீக்கம் செய்வது. 5. ஞானநூல்கள்—முப்பொருள் உண்மையை உணர்த்தி அதன்வழி மல நீக்கம் பெறுமாற்றை அருளுவது. 6. ஒருமை உணர்வு (யோகம்)—சிவபரம்பொருளை ஒருமை உணர்வு கொண்டு எண்ணுமாறு அருளி அதனுல் மலநீக்கம் செய்வது. 7. எரியோம்பிச் செய்யும் செயல்முறை—அகத்தோ அன்றிப்

புறத்தோ மந்திரம் கொண்டு எரியோம்பிச் செய்யும் செயல்முறை யால் மலநீக்கம் செய்வது.

9. விரும்பிய மந்திர அதிகாரம் அர்ச்சனை அதிகாரம்
மேவும்யோக அதிகாரம் எனச்சமய விசேடம்
வரும் பொருவுஇல் நிருவாணம் மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
இரங்கு அடைவில் தொகை பதினொன்று எண்பத்தொன்று ஐம்பத்தொன்று
இருநூற்றிருடு இருபத்துநாலு ஆறாறு ஐந்தில்
பரந்தநெறி அறுவகையும் ஒருவி நினைவு அரிதாம்
பரபதத்துள் உயிர்விரவப் பயிற்றும் அன்றே.

(தெ-ரை) விரும்பப்பட்ட மந்திரங்களை எண்ணுதற்குரிய உரிமை, திருமேனி தீண்டி வழிபடுதற்குரிய உரிமை, அகவழிபாடு செய்யும் உரிமை ஆகிய மூன்றும் சமய விசேட தீக்கைகளால் அமையும். பதினொன்றெனக் கூறப்பெறும் மந்திரம், எண்பத்தொன்றெனக் கூறப்பெறும் சொற்கள், ஐம்பத்தொன்றெனக் கூறப்பெறும் எழுத்துக்கள், இருநூற்று இருபத்து நான்கு எனக் கூறப்பெறும் உலகுகள், முப்பத்தாறு எனக் கூறப்பெறும் தத்துவங்கள், ஐம் பிரிவாகக் கூறப்பெறும் கலைகள் ஆகிய ஆறு வழிகளானும் உயிர்க் குற்றங்களை நீக்கி நினைதற்கரிய மேலாய இறையடிக்கண் உயிர் இயைந்து இன்புறுமாறு செய்வது நிருவாண தீக்கையாகும்.

சமய தீக்கை— சமயநெறியில் நிற்பதற்கு உரிமை உடையராகச் செய்வது. திருவைந்தெழுத்தைக் குருவருளால் பெறவும் புறவழிபாடு செய்யவும் இது பயன்படுவதாம். விசேடதீக்கை— ஒதி உணர்ந்து ஒழுக்கநெறி உடையோர்க்கு இது செய்யப்படுவதாகும். குரு லிங்க சங்கம வழிபாடுகளை மேற்கொள்ளும் உரிமை இவர்களுக்கு உண்டு. திருவைந்தெழுத்தை எண்ணுதற்கும் சிவபூசை செய்வதற்கும் உரிய தகுதியுடன் ஒருமை உணர்வு கொண்டு வழிபடுதற்கும் (யோகம்) இவர் உரியவராவர். நிருவாண தீக்கை—யான் எனது என்னும் அகப் புறப்பற்றுக்களை முழுமையாகக் களையவும் அதன்வழி அரன் கழல் அடையவும் இத்தீக்கை பயன்படுவதாகும். இது இருவகைப்படும். 1. சத்தியோ நிருவாணம்—தீக்கை பெற்றவழி உடன் விடுபேறு அடைவது. 2. அசத்தியோ நிருவாணம்—ஏன்றவினை உடலூழாய்க் கழிந்தபின் விடுபேறு அடைவது. வன்னம்—எழுத்து. பதம்—சொல்.

எழுத்தால் சொல்லும் சொல்லால் மந்திரமும் அமைதலின் இம் மூன்றும் சொல்லுலகாம். கலைவழித் தத்துவங்களும் அவற்றின்வழி உலகும் இயங்குதலின் இம்மூன்றும் பொருள் உலகாம். உயிர் தன்னிலையில் (கேவல நிலையில்) ஆணவத்தோடு கட்டுண்டு கண்ணில்லாக் குழவியைப் போன்று இருந்த காலை, அறிவு விளக்கம் பெறுதற்கு இவை ஆறும் துணை செய்வனவாம். ஆயினும் அவ் அறிவு விளக்கம் நிறைவானது அன்று. ஆதலின் இறைவன் குருவாக எழுந் தருளி இவற்றின் வழி உயிர்க்குக் கிடைத்த குறையுடைய அறிவை நீக்கி நிறையுடைய அறிவை வழங்கி அருளுவன். மந்திரம் பதத்திலும் பதம் எழுத்திலும் ஒடுங்கும். இச் சொல்லுலகம் இவ்வுலகில் அடங்கும். உலகு தத்துவத்திலும், தத்துவம் கலையிலும், கலை மறைப்பாற்றலிலும் ஒடுங்கும். அம் மறைப்பாற்றலே உயிர்க்கு இறையடியைச் சேரும் பேற்றை நல்கும். எனவே உரையற்று உலகியல் உணர்வற்று உடம்பையும் மிகையெனக் கருதி அருளுணர்வு ஒன்றிலேயே அழுந்துமாறு செய்யும் அருமைப்பாடு இதனால் விளையும். இரங்குஅடைவில்—சொல்லப்பட்ட முறையில் ஒருவி—நீக்கி.







PRESS & REGISTRATION OF BOOKS ACT.
Registration of Newspapers (Central) Rules, 1956.
FORM IV. See Rule 8 R. No. 33576/78
Statement about ownership & other Particulars about "SRI KUMARAGURUPARAR" (MONTHLY)

1. Place of publication : TIRUPPANANDAL.
2. Periodicity of its publication : MONTHLY
3. Printer's Name : M. MAIKANDADEVAN
   Nationality : Indian
   Address : Sri Kumaraguruparar Achagam
   : Sri Kasi Mutt, Tiruppanandal.
4. Publisher's Name : MA. VEA. PASUPATHY,
   Nationality : Indian
   Address : Sri Kasi Mutt, Tiruppanandal.
5. Editor's Name : MA. VEA. PASUPATHY,
   Nationality : Indian
   Address : Sri Kasi Mutt, Tiruppanandal
6. Names and addresses of individuals who own the newspaper, and partners or shareholders holding more than one percent of the total capital. His Holiness Sri-la-Sri Kasivasi Muthukumaraswami Tambiran Avl., Head of Sri Kasi Mutt, Tiruppanandal.

I, MA. VEA. Pasupathy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date 4—3—82

MA. VEA. PASUPATHY,
Signature of Publisher.

# திருவிளையாடற்புராணம்

உரை நடை

## 42. திருமுகங் கொடுத்த படலம்

### இறைவன் பத்திரனுக்குப் பாண்டியனின் பொருளை ஈதல்

பாணபத்திரன், ''இனி எமக்கு அறிவாவது இதுவே'' என்று கருதி, அன்று முதல் வரகுண பாண்டியனுடைய சபையில் இசை பாடுகின்ற உரிமையை விடுத்துச் சோமசுந்தரக் கடவுளின் திருக் கோயிலிலே மூன்று காலங்களிலும் சென்று கனிந்த அன்போடு இசை பாடும் நியமம் பூண்டான். இங்ஙனம் இறைவன் திருமுன் பாடுதலே யன்றிப் பிற தொழில் இவனுக்கு இல்லாமையால் வறுமையினை அடைந்தான். அதனைக் கூடல் சித்தர் பொறுப்பரோ? பொறார். ஆதலின் அவர் பாண்டியனது கருவூலத்திலுள்ள செல்வங்களைக் கவர்ந்து கவர்ந்து பாணபத்திரன் முன் ஒவ்வொரு நாளும் வைப்பா ராயினர். சில நாள் பொற் காசும், சில நாள் மணிகள் பதிக்கப்பெற்ற அணிகலன்களும், சில நாள் பொன்னுடை வகைகளும், சில நாள் சாமரையின் பொற் காம்புகளும், சில நாள் சிங்காதனத்தின் பொற்ற கடுகளும், சில நாள் பல சாதி மணிக் குவியல்களும் இறைவன் அளிக்கப் பாணபத்திரன் பெற்றுக்கொண்டு போவானாயினன்.

### பாணபத்திரன் உறவினராதியோர்க்குப் பொருள் வழங்கல்

அங்ஙனம் கைக்குக் கிடைத்த பொருளைத் தனக்கு அளித்த கள்வரும் தானுமே அல்லாமல் வேறு எவ்வகையினர்க்கும் அறியாமல், பாணபத்திரன் நெருப்பிலிட்டு உருக்கவேண்டியவற்றை உருக்கியும், உரு மாற்றவேண்டியவற்றை உருமாற்றியும் அவற்றைக்கொண்டு தன்னைச் சார்ந்தவர்க்கும், இல்லை என்று யாசித்தவர்க்கும், தன் கை வரவு பார்த்து வாழ்வோர்க்கும், பிறர்க்கும் இடையறாது அளித்து அவர்களின் உள்ளக் கவலையைத் தவிர்த்து வருவானாயினன்.

### இறைவன் பாணபத்திரன் கனவில் தோன்றிக் கூறல்

இவ்வாறு நாடோறும் கொடுத்துக்கொண்டிருந்த சிவபெருமான், சிலகாலஞ் சென்றபின் ஒன்றுங்கொடாதொழிந்தார் பாணபத்திரன் நாடோறும் சென்று சென்று கைதொழுது வணங்கி ஒன்றும் பெறாத வனாகத் திரும்பி வந்து கொண்டிருந்தான்; வேறு பிழைக்கும் வகை அறியாமல் வறுமைக் கடலில் அழுந்திப் பசியினால் தன் சுற்றத்தாரும் ஒருசேரவாடித் துன்பமுறப் பொறுக்கலாற்றாது துயின்றான். அப் போது அவன் கனவின்கண் சோமசுந்தரக் கடவுள் தோன்றி, ''அப்பனே! நாம் பாண்டியனது பொன்னறையில், யானை உண்ட

விளாங்கனிபோல் அதுஆகுமாறு பொருளைக்கவர்ந்து இன்று வரையில் உனக்குக் கொடுத்தருளினேம்; எம்மிடத்து அன்பு வைத்த வரகுண பாண்டியன் இதனை அறிந்தால் சந்தேகங்கொண்டு வேறுநினைத்து விடுவான்; வேறு ஆடவரிடம் ஆசையின்றிக் கற்பினைக் காக்கும் மகளிர்க்கு நாணம்முதலியன அகத்தே நீங்காது நின்று காத்தல் போலவும், துறவறத்தைக் காக்க முயல்வார்க்குப் புறத்திலுள்ள ஐம்பொறி விடயங்கள் புகுதாது தடுத்து நிற்றல் போலவும் அகக்காவலும், முரசொலியுடன் காக்கும் புறக்காவலும், கயற் குறியும் இருக்கப் பொருளைக்கவர்ந்தது அற்புதம்! இவ்வாறு கவர்ந்த கள்வன் உயிர்கள்தோறும் ஒளித்துநின்ற ஒருவனாயிருப் பானோ! அறியேன்! என்பான்; களவுபோனதை அறிவானேல் பொன்னறைக் காவலர்களுக்கு மிக்கதண்டனையும் கிடைக்கும். ஆதலால் உன்னைப்போலவே நம்மிடம் அன்புகொண்டுள்ள சேரமா னுக்கு இப்பொழுது நாம் ஒருஓலை எழுதித் தருவோம்; நீ அங்குப் போகக் கடவை '' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இறைவன் பாணபத்திரனுக்குத் திருமுகம் கொடுத்தருளல்

உடனே சோமசுந்தரக்கடவுள் வேதத்துக்குப் பொருளருளிச் செய்த திருவாக்கினால்,

''மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க!
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே''

என்னும் சொற்பொருட் சிறப்புடைய [1] திருமுகப் பாசுரம் ஒன்றினை

1. இது 11-ஆம் திருமுறையின் முதற் பாடல் ஆகும்.

எழுதிக்கொடுத்து[1] மறைந்தருளினர். அப்போது பாணபத்திரன் துயில் நீங்கி எழுந்து, ஆடிப்பாடி உவகைக் கடலிலே மூழ்கினன்.

பாணபத்திரன் மலைநாடு அடைதல்

பாணபத்திரன், தான் பெற்ற திருமுகத்தைப் பட்டாடையில் வைத்துச் சுற்றி இறைவன் திருவடியை வணங்கி அங்கு நின்றும் நீங்கித் திருக்கோயிலை அடைந்து வலஞ்செய்து கொண்டு விரைந்து மேற்றிசையை நோக்கி மலை நாட்டிற்குப் புறப்பட்டான்; வழியில் முல்லை நிலத்தையும், குறிஞ்சி நிலத்தையும், வெய்ய பருக்கைக் கற்கள் நிறைந்த வழியினையுடைய பாலை நிலத்தையும் கடந்து பலாக்கனிகள் கால்களில் இடற மெல்ல மெல்ல நல்வளம் மிகுந்த மலை நாட்டினை அடைந்தான்.

திருவஞ்சைக்களம்

அலை கடலினை ஆடையாகக் கொண்ட மலை நாடென்னும் பெண்ணுக்கு வானளாவி நிற்கும் மலைகள் கொங்கைகள் போல விளங்கின; திருவஞ்சைக் களம் என்னும் பதி அப்பெண்ணின் முகத்தில் தீட்டப்பெற்ற திலகமே போன்று விளங்கியது. அப்பதி அறமகள் ஆக்கத்திற்கும், திருமகள் ஆக்கத்திற்கும், கொற்றவை (வீர மகள் ஆக்கத்திற்கும், வடமொழி தென்மொழி என்னும் கலைமகள் ஆக்கத்திற்கும் சிறந்த உறைவிடமாகத் திகழ்வது. இத்தகைய புகழ் வாய்ந்த திருவஞ்சைக்களத்து நகரின் வீதியின்கண் உள்ள ஒரு தண்ணீர்ப் பந்தலில் பாணபத்திரன் தங்கினன்.

சேரமான்பெருமாள் நாயனரின் கனவு

பிறகு சோமசுந்தரக் கடவுள் அன்று இரவில் சேரமான் பெருமாள் நாயனரின் கனவில் தோன்றி, ''மன்னவ! நின்னிடத்து வந்துள்ள யாம் பாண்டியனது மதுரையிலே இருக்கும் சித்தராவேம்; நம் அடியவன் பாணபத்திரன்; அவன் உன்னைக் கண்டு நல்ல பொருள் பெறும் பொருட்டு நம்முடைய திருமுகம் பெற்றுக்கொண்டு இங்கே வந்திருக்கின்றான். அவனுக்கு அரிய பொருளைக் கொடுத்து விரைந்து அனுப்புக'' என்று கூறி மறைந்தருளினர். உடனே சேரமான் பெரு

---

1. இங்கே, ''பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்'' (திருஞானசம்பந்தர் தேவாரம்–கோளிலி) எனவும், ''குடக்கோச்சேரன் கிடைத்திது காண்கென, மதிமலி புரிசைத் திருமுகங் கூறி, அன்புருத் தரித்த இன்பிசைப் பாணன், பெறநிதி கொடுக்கென உறவிடுத்தருளிய, மாதவர் வழுத்துங் கூடற்(கு) இறைவன்'' (கல்லாடம்) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

மாறுயனுர் விழித்தெழுந்து தாம் கண்ட கனவை அமைச்சரோடு கூறி, அங்கயற் கண்ணிபங்கரது திருமுகத்தைக் கொண்டு வந்த பாணபத்திரனைத் தேடிக் கண்டு வருக' என்று ஏவலாளர்க்குக் கட்டளையிட்டார். சேரமானின் ஏவலாளர்கள் மாட வீதிகளிலும், திண்ணைகளிலும், கடைவீதிகளிலும், மன்றங்களிலும்சென்று சென்று தேடினுர்கள்; இறுதியிலே பாணபத்திரன் தண்ணீர்ப் பந்தலில் தங்கி இருக்கக் கண்டு அச் செய்தியை விரைந்து சென்று அரசனுக்குத் தெரிவித்தனர்.

சேரமான் பாணபத்திரனை எதிர்கொண்டழைத்தல்

உடனே சேரமான் பெருமாளும் தம் நால்வகைச்சேனையோடும் எழுந்து சென்று பாணபத்திரனைக் கண்டு அன்பின் பெருக்கால் சிரசின்மீது கைகூப்பிப் பாடினுர்; ஆனந்தக் கூத்தாடினுர்; தண்டு போல் கீழே விழ்ந்து வணங்கினுர்; குளிர்ந்த தேனைக் கண்டு வண்டு மகிழ்வதுபோல மகிழ்ந்தார்; திருமுகத்தை வாங்கிக் கண்களில் ஒற்றித் தலையின்மேல் மாலை போல் தாங்கினுர்; மகிழ்ச்சி மிக்குக் கண்ணீர் பொழிந்தார்; உடம்பு பூரிக்க, உரோமஞ் சிலிர்க்க, அத் திருமுகத்தை எடுத்து, ''ஒளி விளங்கும் பொன்னுலாகிய மாடங்கள் நிறைந்த மதுரைப் பதியில் எழுந்தருளிய சிவனுகிய யாம் எழுதி அனுப்புஞ் செய்தி, நல்ல மேகத்தினைப் போலப் புலவர்களுக்கு வரையாது அளிக்கும் சேரமான் காண்க; இத்திருமுகங் கொண்டு வரும் பாணபத்திரன் நின்னைப்போல் எம்மிடத்து அன்புடையான்; அவன் நின்னிடத்து வருகின்ருன்; அவனுக்குப் பெருநிதி கொடுத்து அனுப்புவது'' என்று சோமசுந்தரக் கடவுள் வரைந்தருளிய செய்தியை நோக்கி எல்லையற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்தார்; அத் திருமுகத்தைப் பொற்பீடத்தின்மேல் வைத்து, யானையின் மேலேற்றிப் பாணபத்திரனை முன்னிருத்தித் தாம் பின்னிருந்து இரட்டை கவரி வீசிக் கொண்டு பலவகை வாத்தியங்கள் முழங்க நகர் வலஞ் செய்வித்து மகளிர் அட்ட மங்கலங்களை ஏந்திக்கொண்டு எதிரே வரச் சென்று அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போயினுர்.

சேரமான் பாணபத்திரனுக்கு விருந்தளித்தல்

பிறகு சேரமான் பெருமாள் பாணபத்திரனை நன்னீரால் ஸ்நானம் செய்வித்து, மணிமண்டபத்தில் இடம்பெற்ற பொன்னுசனத்தின் மேல் எழுந்தருளச் செய்து அருச்சித்து அறுசுவை அமைந்த இனிய அமுதினை உண்பித்து நறுமணங்கமழும் கலவைச் சந்தனமும், மலர் முதலிய முகவாசமும், பொற்றட்டில் வெற்றிலையும் இனிய பாக்கும் பிறவும் முறைப்படி அளித்து உபசரித்தார்.

### பாணபத்திரன் சேரமானிடம் பொருள்பெற்றுப் புறப்படல்

சோமசுந்தரக் கடவுள் அருளிய திருமுகத்தின்கண் "வரவிடுப்பபது" என்ற கட்டளை இருத்தலால் அங்ஙனமே அனுப்பிவைக்கச் சேரர்பெருமான் கருதித் தம் கருவூலத்தைத் திறந்து பாணபத்திரனை அழைத்துக் காட்டி, "எம்பெருமானுடைய திருத்தொண்டரே! இத் திரவியமெல்லாவற்றையும் நீரே கைக்கொண்டுபோம்" என்று கூற, பாணபத்திரன் சேரமானை எதிர் வணங்கி, "சிவபெருமான் திருவருளுக்குரியீராகிய நீர் தருவது தமியேனுக்குப் போதும்" என்றான். சேரமான் பெருமாள், 'எல்லாப் பொருளும் அவருடையன' என்று தாம் எண்ணிய வண்ணம் வாரி வாரி வழங்கவும், பாணபத்திரன் அவற்றை மறுத்து மறுத்துத் தனக்கு வேண்டிய அளவு பொன்னுபரணம், திரவியம், பொன்னுடை, பொற்சிவிகை, யானை, குதிரை முதலிய பலவற்றையும் பெற்றுக் கொண்டு புறப்பட்டான். பிறகு சேரர் பெருமான் பாணபத்திரன் பின்னே ஏழு அடி தூரம்[1] தொடர்ந்து சென்று திரும்பாது, நெடுந்தூரம் பாணபத்திரனோடு சென்று வழியனுப்பிவைத்து மீண்டார்.

### பாணபத்திரன் மதுரையை அடைந்து வாழ்தல்

பாணபத்திரன் சேரர் பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு குபேரனைப்போல் மதுரை மாநகரரை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கினன்; பிறகு தான் கொணர்ந்த பொருள்கள் அனைத்தையும் மதுரைத் திருநகரில் உள்ளவர் யாவரும் அறிய அந்தணர், புலவர்கள், இரவலர் முதலிய யாவர்க்கும் வேண்டுவன வழங்கி, மகிழ்ச்சியோடு வாழ்ந்து வந்தனன்.

செய்யுள்—30

ஆகச் செய்யுள்—2130

---

1. வேறு சில நூல்கள், பெரியோர்கள் தம் இல்லத்திற்கு எழுந்தருளிப் போம்பொழுது பின்னே பதினன்கு அடி தூரம் தொடர்ந்து சென்று வழிவிட வேண்டும் என்றும் கூறுகின்றன. இதனை, "போம்பொழுது பின்னே பதினன்(கு) அடி போக; நாம்பெற்றோம் என்றெண்ணிநன்று" என வரும் சைவ சமயநெறித் திருக்குறளாலும் அறியலாம்.

# 43. பலகையிட்ட படலம்

## பாணபத்திரனின் இசைத் தொண்டு

முன்னே முப்பொழுதும் போய்ச் சோமசுந்தரக் கடவுளை வணங்கி இசை பாடி வந்த பாணபத்திரன், சேரமானிடம் பொருள் பெற்ற பின்பு, அன்பு மிகுந்து அர்த்த யாமத்திலும் சென்று வணங்கி, இடப தேவருக்குப் பின்புறத்தில் நின்றுகொண்டு ஏழிசை பாடி வரும் நியமம் பூண்டான். ஒரு நாள் இரவிலே, வெள்ளியம்பலத்தில் ஆடியருளும் ஒப்பற்ற பெருமான் முத்துச் சிவிகையின்மேல் திருப்பள்ளியறைக்கு எழுந்தருளும்போது, பாணபத்திரன் எவ்வகை இடையூறு அடுத்தாலும் தன் நியம நெறியினின்றும் தவறான் என்பதை உலகினர் அனைவரும் அறியும் பொருட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாட்டினால் எட்டுத் திக்குகளிலும் கரிய முகில்கள் பேரொலி கொண்டு ஆரவாரித்து எழுந்தன.

அப்போது பாம்புகள் துடிதுடித்துச் சோர்ந்து சுருண்டு புற்றில் நுழைந்து பதுங்கின. அணியணியாக மின்னல் எழுந்து வீசின; திசை மயங்கும்படி விண்மீன்கள் மறைய இருள் கவிந்தது; வருணன் முன்னொரு நாளில் மதுரையை அழித்தற்பொருட்டு ஏவிய ஏழுமுகில்களும் வந்துவளைந்தாற் போலமேகங்கள் வந்து வளைந்து, செறிந்த இருளினால் இருப்புக் கோல்களை நிரைபட நட்டுவைத்தாற்போல நிறம் கருகித் தோன்ற, அவற்றைக் கடல்நீர் முழுதையும் வானம் எடுத்துக் கவிழ்ப்பது போலப் பெருமழை வெள்ளிய தாரைகளாகப் பொழிந்தது.

[1] ஆன்மாவாகிய தம்மையும் தலைவனாகிய சிவத்தையும் அறிந்து கொள்ளாதவர் மனம்போல உள்ளென்றும் வெளியென்றும் பக்கமென்றும் கீழென்றும் மேலென்றும் அறியலாகாது மயங்கிய இருளின்கண்ணே பெய்யும் அப் பெருமழையில் நனைந்து வருவானாகிய பாணபத்திரன், அந்த மழையினை மலர் மழையாகக் கருதித் திருக்கோயிலை அடைந்தான்; சோமசுந்தரக் கடவுளை வணங்கி அவருடைய திருவருட்கருணையாகிய மழையில் நனைந்து, தேன் மழை பொழிவதுபோல யாழினை வாசிக்க இடப தேவரின் பின்னே நின்று, யாழினை இடத்தோளில் அணைத்து, நரம்பை அமுக்கித் தெறித்துப் பார்த்தான்; பிறகு தன் மிடற்

1. ''தன்னை அறியார் தலைவனையும் அறியார்'' என்பது ஆன்றோர் வாக்கு.

ருலியை எழுப்பித் தமிழினுல் தொடுக்கப்பட்ட இசைப் பாட்டாகிய அமிழ்தம் மடைதிறந்து கொன்றை மாலையை அணிந்த சோமசுந்தரக் கடவுளின் திருச்செவியாகிய கால் வழியாகச் சென்று பாய்ந்து திருவருளாகிய பசிய பயிர் ஓங்கும்படி யாழின் நரம்பு நனைந்து இசை மழுங்கவும், உடம்பு நனைந்து நடுங்கவும், குரல் முதலிய இசையின் எல்லை கடவாது போக்குவரவு செய்யும் விரல்கள் விறைத்து வலிக்கவும், மயிர் குளிரால் சிலிர்க்கவும், கால்கள் சேற்றில் புதைந்து சிறிதும் பெயராது நின்றுகொண்டு அன்பே இசை மயமாய் அரும் புதல் போல எலும்பினை உருக்கும் அமுத இசையினைப் பொழிந்தான்;

மாதர் நகையாய்! மதுரேசர்
உண்பலிக்(கு)எம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென்
சிந்தை கவர்ந்தார் போலும்;
காதன் முகத்தரும்பக் கையறவு
தீரக் கலப்பேன் பாதி
பேதையுரு வாயிருந்தார் நாணிவிழித்(து)
ஆவி பிழைத்தேன் போலும்.

ஒண்ணுதலாய்! வெண்டலைகொண்(டு) உண்பலிக்கு
நம்மனையி னூடே கூடற்
கண்ணுதலார் உள்ளாளக் கானமிசைத்(து)
என்னுள்ளங் கவர்ந்தார் போலும்;
கண்ணுதலார் பாடும் [1] அவிநயங்கண்(டு)
ஆகங் கலப்பேன் பாதி
பெண்ணுருவ மாயிருந்தார் வெள்கிவிழித்(து)
ஆவி பெற்றேன் போலும்.

ஐயரியுண் கண்ணாய்! திருவால
வாயுடையார் ஐயங் கொள்வான்
மையகை செய்தென் வனமுலையின்
மேற்செங்கை வைத்தார் போலும்;
மையனகை செய்தென் வனமுலைமேற்
கைவைப்ப மாழ்கிச் சோர்வேன்
தையலிடங் கண்டு நடுநடுங்கி
விழித்(து)ஆவி தரித்தேன் போலும்;

---

1. அவிநயம்—இங்குக் காம அவிநயம்.

## இறைவன் பாணபத்திரனுக்குப் பொற்பலகை இடுதல்

இசை பாடும் ஆகா, ஊகூ என்னும் இருவர்க்கு அந்நாளில் பரிசிலாகச் சங்கக்குழையினை அணிந்த திருச்செவிகளை இடமாக அளித்த கூடற்பெருமான் பாணபத்திரனுடைய இசைத் தொண்டினைக் கண்டருளி, ''பாணபத்திரா! இந்தப் பலகை உனக்கே உரியது; நீ இதன்மேல் நின்று பாடுக'' என்று வானிலே அசரீரியாகக் கூறியருளி, நவமணி இழைத்த பொற்பலகை ஒன்று இட்டருளினர். அப்போது பாணபத்திரன் இறைவன் அருளிய ஆணையை மறுத்தற்கு அஞ்சி அப் பொற்பலகையின் மேல் ஏறி நின்று தேனினும் இனிய இசையினைப் பொழிந்தான்.

## பாணபத்திரன் தன் வீடு அடைதல்

பிறகு நான்மறைகளும் முடியிற் சூடும் வீரக் கழலணிந்த திருவடியினை உள்ளத்திற்கொண்டு பலகையினைக் கையில் ஏந்தித் தன் வீட்டிற்குச் சென்றான். செல்லுங்கால் மழை நின்றுவிட்டது. அப்போது வானத்திலுள்ள முகிற் கூட்டங்கள் விலகின. அகத்திய முனிவரால் பருகப்பெற்ற கடல் நீர் வற்றிப் பொன்னும் மணியும் முத்தும் புலப்படக் கிடந்தாற் போல் விண்மீன்கள் விளங்கின; பாணபத்திரன் மனையிற் படுத்து உறங்கினன்.

## வரகுண பாண்டியன் பாணபத்திரனை உபசரித்தல்

பின்பு கதிரவன் கண் விழித்து இருட் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு தனது கிரணமாகிய ஆயிரங் கரங்களையும் விரித்துக் கீழைக் கடலை நீந்தும் பொழுது வரகுண பாண்டியன் இராப்போதில் சோமசுந்தரக் கடவுள் பாணபத்திரன் பாடலுக்கு அளித்தருளிய அருட்கொடையைக் கேட்டறிந்து பாணபத்திரனை அழைத்து இறைவன் இட்டருளிய அப்பலகையின்மீது இருக்கச் செய்து ''இவனே எங்கள மதுரை நாயகன்'' என எண்ணி மணிக்கலங்களையும் நிலங்களையும் பெரு நிதிகளையும் மிகுதியாகக் கொடுத்து முறையாகப் பல நாளும் நடத்தி வந்தான். வரகுண பாண்டியன் அருளிய பரிசைப் பெற்ற பாணபத்திரனும் ஆலயத்திற்கு நாடோறும் நான்கு காலமும் சென்று சோமசுந்தரக் கடவுளை வழிபட்டுக் கொண்டு வந்தான். வரகுண பாண்டியன் கூடற் பெருமானின் திருவடிகளைத் திருக்கோயிலின்கண் வந்து வணங்கி துதித்துச் சில நாள் கழிந்தபின் சிவ சாருப்பியம் பெற்றுச் சிவபுரம் அடைந்தான்.

செய்யுள்—18

ஆகச் செய்யுள்—2178